# உள்ளுறை

# பாமணிக்கோவை

## I கடவுள்

### 1. திருஞான சம்பந்தர் தேவாரம்.

வரலாறு—சிவ பெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுஞ் சமயம் சைவம் எனப்படும்; சிவசம்பந்த முடைமையால் சைவம் எனப்பட்டது. சைவ சமயாசாரியர் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வர். இவர்தம் பெரும் புகழை நால்வர் என்னும் வழக்கே நன்கு புலப்படுத்தும். முதன் மூவரும் மூவர் என்று பிரித்தும் வழங்கப்படுவர். இந்நால்வருள் ஒருவராகிய திருஞான சம்பந்தர் இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர், இப்போது தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள சீகாழி என்னும் திருப்பதியில் வேதியர் குலத்திலே கௌணிய கோத்திரத்திலே சிவபாதவிருதயர் என்பவருக்கும், அவர்தம் கற்பிற் சிறந்த மனைவியார் பகவதியார் என்பவருக்குஞ் செல்வப் புதல்வராக அவதரித்தார்; திருவருளால் மூன்றாம் ஆண்டில் உமாதேவியாரால் ஞானப்பா லூட்டப்பட்டார்; ஞானப்பாலுண்ட காரணத்தால் திருஞான சம்பந்தர் என்னுந் திருநாமம் பெற்றார்; அதுமுதல் அறிவு கனிந்தொழுகுந் தீஞ்சுவைச் செழுந்தமிழ்ப் பாடல்களைப் பாடுவாராயினர். 'தோடுடைய செவியன்,' என்னும் முதலையுடைய திருப்பதிகம் அவரான் முதன் முதல் பாடப்பட்டது. பான்மண மறுப் பச்சிளம்

பருவத்தே இத்தெய்விகச சிறுவர் அருமருந்தன்ன திருப்பா சுரங்களை முதிர்சுவை தேக்க, இன்னிசையும் இலக்கண வமைதியும் பொருந்தப் பாடுதலைக் கண்ட மக்கள் கங்குகரையற்ற களிப்புடையவராய்த் திரள் திரளாகக்கூடி, இவரது பெறற்கரிய திருவருட் செல்வத்தைப் பெரிதும் பாராட்டி உடனுறைவாராயினர். சிவபெருமான் இவருக்குப் பொற்றாளம், முத்துச் சிவிகை முதலியவற்றை அளித்தருளினர். இவர் திருப்பதிகள் தோறும் அடியவர் குழாத்துடன் சென்று ஆயகாய கொழுந்தருளி யிருக்குஞ் சிவபெருமான்மேல் அருந்தமிழ்ப்பதிகம் ஓதுதலையே திருப்பணியாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்; அக்காலை முயலகன் நோய் தீர்த்தல், ஆண்பனையைப் பெண்பனையாக்கல், எலும்பைப் பெண்ணாக்கல் முதலிய அரிய அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தினர்; மதுரைமா நகரில் கூன்பாண்டியன் அவைக்களத்தில் சமணர்களோடு வாது புரிந்து அவர்களை வென்றார்; பதினாறு ஆண்டு நிரம்புமுன் இவ்வரும்பெருஞ் செயல்களைச் செய்து முடித்து, தம் தந்தையார் விரும்பிய வண்ணம் மணம் செய்துகொள்ள இசைந்து, திருப்பெருமணம் என்னுந் திருக்கோயிலிற் சென்று, அங்கே வதுவை காணவந்த மக்கட்டிரளுடன் ஒருங்குத் தோன்றிய அருட்சோதியிலே கலந்தருளினர். இவர் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களுள் இன்றுவரை கிடைத்திருப்பவை முந்நூற்று எண்பத்துநான்கு. ஒவ்வொரு பதிகமும் பதினொரு பாக்களை யுடையது. இவர் கடவுளைத் தந்தையாக எண்ணி வழிப்பட்டவர். அவ்வாறு வழிபடு மார்க்கம் புத்திர மார்க்கம் எனப்படும்.

இவர் ஞானப்பாலுண்ட நிகழ்ச்சியையும், இளம்பருவத்தையுங் குறிக்க இவர் திருப்பாட்டுகளிலேயே அகச்சான்றுகள் பல உள. அவற்றுள் ஒரோவொன்று இங்குத் தரப்படும். ஞானப் பாலுண்டமைக்கு,

'போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தந்தென்னை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே'

என்னுந் திருப்பாடல் சான்றாகும்.

இளம் பருவத்தைக் குறிப்பதற்கு ஞானசம்பந்தர் பாண்டிமா தேவியாரை நோக்கிக் கூறும்,

'மானினேர் விழிமாதராய் வழுதிக்கு மாபெருந் தேவிகேள்
பானல்வா யொருபால னீங்கிவ னென்று நீ பரிவெய்திடேல்'

என்னுந் திருப்பாட்டே சான்றாம்.

ஞானசம்பந்தர் தம்மைச் சிறுவன் என்று குறித்தது அவரது இளமையைக் காட்டுதல் காண்க. ஞானசம்பந்தர் காலத்திருந்த அடியவருள் குறிப்பிடத்தக்கவர்கள் திருநாவுக்கரசு நாயனார், சிறுத்தொண்டர், குங்குலியக்கலயர், அப்பூதியடிகள், திருநீலகண்ட யாழ்ப்பாணர் முதலியோர். இவரது தேவாரத் திருப் பண்ணடைவு திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் பரம்பரையில் வந்த ஒரு பெண்மணியாரால் வகுக்கப்பட்டது. இவரை வழிபட்டுப் பிறவிக்கடல் கடந்தோர் பலர்.

தேவாரம்—மூவரும் பாடியருளிய திருப்பாட்டுக்கள் தேவாரம் எனப் பெயர் பெறும். இச்சொல்லைத் தே + வாரம் எனப் பிரித்துத் தெய்வத்தன்மை பொருந்திய சொல்லொழுக்கானும் இசையொழுக்கானுஞ் சிறந்த பாடல்கள் என்றும், தே + ஆரம் அல்லது தேவ + ஆரம் எனப் பகுத்துச் சிவபிரானுக்குப் பூமாலைபோற் சாத்தப்படும் பாமாலை என்றும் பொருள் கூறுவர். இவற்றுள் முதல்கூறிய பொருளே பொருத்தமுடைத்து; இரண்டாவது நயமுடைத்து. தேவாரம் தமிழ் மறை என எல்லாராலும் கொண்டாடப்படும். இதனை

ஓதுவோர் இம்மை மறுமைப் பயன்களையும், வீடுபேற்றையும் அடைவர் என்பது சைவர் கொள்கை. சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் ஞானசம்பந்தர் பாடல்கள் முதன் மூன்று திரு முறைகளாகும்.

திருப்பாடல் இயல்பு—திருஞான சம்பந்தர் திருப்பாசுரங்கள் வடித்த செந்தமிழ்ச் சொற்களால் ஓசையொழுக்குப் பொங்கித் ததும்புவனவாய், நுணுகிப் பார்த்த பொருள்வளங் கெழுமிப் பத்திச்சுவை பொழிவனவாய், கேட்போர் செவிப்புலனையும் ஓதுவோர் மனப்புலனையுங் கவர்வனவாய்த் திகழ்கின்றன; இசைத் தமிழ்ச்செறிவும் இயற்றமிழ்ப் பொலிவும் வாய்ந்து, பல வகைப்பட்ட ஒப்பனைகளோடு இலங்குகின்றன. அவற்றுள் பல இயற்கையின் அழகையும், செழுமையையும் எடுத்துக் காட்டும்; பல சமத்காரம் காட்டும்; மாலைமாற்று, ஏகபாதம், திருவெழு கூற்றிருக்கை முதலிய மிறைக்கவிகளும் பல. இவர் செய்யுட்களின் சுவை மிகுதியை நோக்கிப் போலும் நம்பியாண்டார் நம்பி தாம் பாடிய மும்மணிக்கோவையில், இவர்பாற் சோராதாரை இகழ்ந்து, 'தீத்தறு அவிழ்ச்சுவையே அறிந்து அரனடி பரவுந் தமிழ்ச்சுவை யறியாத் தம்பங்களையே', என்பாராயினர். 'மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொலுந் தமிழ்', 'தாக்கில் திருஞானசம்பந்தர்', என்பன போன்ற அமுத வாக்குக்கள் இவர் திருவாக்கின் செம்மையையும் வன்மையையும் புகழ்ந்துரைக்கும். 'வேதம் பசுவதன்பால் மெய்யா கமம் நால்வர் ஓதுந் தமிழதனி னுள்ளுறு நெய்', என்பது தமிழ்மறையின் சிறப்பைத் தெரிவிக்கும்.

பதிகம்—இது தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள திருவையாறு என்னுந் திருத்தலத்தில் இவர் கட்டளையிட்ட பதிகம். திருவையாற்றை வடமொழியில் பஞ்சநத க்ஷேத்திரம் என்பர். அவற்றுள் ஐந்து பாடல்கள் ஈண்டுப் பாடத்துக்குத் தெரிந்தெடுக்

கப்பட்டன. இவர் பதிகம் ஒரு முறையைத் தழுவியது. பதிகந்தோறும் ஒன்பதாஞ் செய்யுள் திருமால், பிரமன் இருவரையுங் குறித்தும், பத்தாவது சமணரைக் குறித்தும், பதினொன்றாவது பதிகத்தின் பயனைக்குறித்துங் கூறும். கடைப்பாட்டுக்குத் 'திருக்கடைக் காப்பு' என்று பெயர். இவைவைந்து செய்யுட்களும் கெட்டி முத்துக்கள் போலச் சொல்வளமும், பொருள்வளமும் பெற்றுள்ளன. இவற்றின் வருணனை இன்புறுதற்பாலது; தெளிந்த ஓசையும், களிற்றேற்றின் பெருமிதமூர்ந்த நடையும், இயற்கை நலமுஞ் செயற்கை வினைத்திறனும் பொருந்திய அணியமைப்பும் எவ்வெவர் உள்ளத்தையும் உருக்கும் என்பது திண்ணம்.

விடல்ஏறு படநாகம் அரைக்கசைத்து
வெற்பரையன் பாவை யோடும்
அடல்ஏறொன் றதுவேறி, 'அஞ்சொலீர்! பலி,'
என்னும் அடிகள் கோயில்,
கடல்ஏறித் திரைமோதிக் காவிரியின்
உடன்வந்து கங்குல் வைகித்
திடல்ஏறிச் சுரிசங்கஞ் செழுமுத்தங்
கீன்றலைக்குந் திருவை யாறே. (1)

கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர் மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங் கோயில்,
கொங்காளப் பொழில்நுழைந்து கூர்வாயால்
இறகுலர்த்திக் கூதல் நீங்கிச்
செங்கானல் வெண்குருகு பைங்கானல்
இரைதேருந் திருவை யாறே. (2)

உலன்பாயும் உடைதலைகொண் டூரின்
பலிக்குழல்வார் உமையாள் பங்கர்
தான்பாயும் விடைஏறுஞ் சங்கரனார்
தழலுருவர் தங்குங் கோயில்,
மான்பாய வயல்அருகே மரம்ஏறி
மந்திபாய் மடுக்கள்தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டலருந் திருவை யாறே. (3)

நின்றுலாம் நெடுவிசும்பின் நெருக்கிவரு
புரம்மூன்றும் நீள்வாய் அம்பு
சென்றுலாம படிதொட்ட சிலையாளி
மலையாளி சேருங் கோயில்,
குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச
மலர்பாய்ந்து வாசம் மல்குந்
தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு
கண்வளருந் திருவை யாறே. (4)

அஞ்சாதே கயிலாய மலைஎடுத்த
அரக்கர்கோன் தலைகள் பத்தும்
மஞ்சாடு தோள்நெரிய அடர்த்தவனுக்
கருள்புரிந்த மைந்தர் கோயில்,
இஞ்சாயல் இளந்தெங்கின் பழம்வீழ
இளமேதி இரிந்தங் கோடிச்
செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல
வயல்படியுந் திருவை யாறே. (5)

———

## 2. திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்

இவர் திருவாமூரில் வேளாளர் குலத்திலே புகழனாருக்கும், மாதினியாருக்கும் புதல்வராய் அவதரித்தார். இவரும் திருஞான சம்பந்தரும் ஒரேகாலத்தினர். ஆதலின் இவர் காலமும் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் என்பது சொல்லாமே அமையும். இவருக்குப் பிள்ளைத் திருநாமம் மருணீக்கியார் என்பது. இவர் இளம்பருவத்திலேயே கல்வி கற்கத் தொடங்கிப் பல துறைகளி லும் பயின்று பெருங்கல்விச் செல்வராக விளங்கினார். இவர் பெற்றோர் இவரது இளமையிலேயே உலக வாழ்வை நீத்தனர். பெற்றோரால் கணவரெனத் துணியப்பட்ட கலிப்பகையார் பிரிவுக்காற்றாது, உயிர்துறக்கத்துணிந்த இவர் தமக்கையார் திலகவதியார் என்பார் இவர் பொருட்டு உயிர் தாங்கியிருந்தனர். இவர் கற்றதன் பயனாகப் பல வகைப்பட்ட தருமங்களையுஞ் செய்தார்; பின்னர்ச் சைவ சமயத்தின் பெருமை அறியாது அக்காலத்துச் சிறந்து திகழ்ந்த சமண சமயம் புகுந்தனர். மருணீக்கியார் அங்கே சமணர் நூல்கள் எல்லாவற்றையும் கற் றுத் துறைபோயினர். அமணரும் அவரை ஆசிரியராகக்கொண்டு அவருக்குத் தருமசேனர் என்னும் பட்டமும் அளித்தனர். இவ் வாறு வாழ்ந்துவருங்கால் தருமசேனருக்குச் சூலை நோய் உண் டாயிற்று. அதனால் அவர் பெருந்துன்பம் உழந்தனர். மந்திரம், மருந்து முதலிய எவ்வகைப் பிரயோகங்களாலும் நோய் நீங் காமையைக் கண்ட நாயனார், தமது தமக்கையாரைக் காண விரும்பினர். அவ்வம்மையார் அப்போது திருவதிகையில் திருத் தொண்டு செய்திருந்தனர். அவர் தமது தம்பியாரைத் தம்பால் வரும்படி செய்து, அவருக்கு ஐந்தெழுத்தை உபதேசஞ் செய்த னர். அதனால் களிப்பெனுங் கடலில் முழுகி அதன் கரை காணா ராகிய நாயனார், 'கூற்றாயினவாறு' என்னும் முதலையுடைய திருப் பதிகம் பாடியருளச் சூலை நோய் நீங்கிற்று. பின்னர்ச் சிவதளி

கள் தோறுஞ் சென்று, பதிகங்கள் கட்டளையிட்டு வருவா ராயினர்.

இவர் சீர்த்தி தமிழ் நாடெங்கும் பரவியது. இவரை மக்கள் பலரும் வியந்து சூழ்ந்தனர். இவர் திருப்பாடல்களின் ஏற்றத்தையும், பொருளுறுதியையும், செறிவையும் வியவாதார் நயவாதார் இலர். சிவபெருமான் இவருக்குத் திருநாவுக்கரசு என்னும் பெயரும் அளித்தனர். சமணர்கள் இவரை அரசனுணையால் வருவித்துப் பலவாறு கொல்ல முயன்றனர். நஞ்சைக் கூட்டிக் கொடுத்தனர்; நீற்றறையிலிட்டனர்; பட்டத்து யானையை ஏவினர்; கல்லோடு கட்டிக் கடலிலிட்டனர்; இவை யொன்றானும் தாம் இறவாமல் சிவபெருமான் திருவருளால் தேறியுய்ந்தனர்; எண்பத்தொரு வயது வரை வாழ்ந்திருந்து பல அற்புதங்களைச் செய்து, சிவபெருமான் திருவடியில் இரண்டறக் கலந்தனர். இவர், சமணர் கல்லைக் கட்டிக் கடலிலிட்ட போது தாம் உய்ந்து கரையேறியதைத் தமது திருவாக்காலேயே கூறியிருப்பது நோக்கத்தக்கது. அது பின் வருவது:

‘கல்லி னோடெனைக் கட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடிஅரன்
நல்ல நாமம் நவிற்றியுய்ந் தேன்அன்றே.’

இவர் பாடியருளிய திருப்பாட்டுக்களில் அன்பு பொங்கி வழியும்; கல்விச் சாதுரியமுங் கற்பனையும் மலிந்துகிடக்கும்; செந்தமிழ்ச் சுவை விஞ்சும்; ஞான நறுமணங் கமழும்; புகழாப் புகழ்ச்சி முதலிய அணிகளும் பல ஆங்காங்குக் காணப்படும்; தாண்டகம், நேரிசை, குறுந்தொகை முதலிய செய்யுள் வகைகளும் பல உள. ‘தாண்டகச் சதுரர்’ எனச் சேக்கிழார் இவரை வியந்துரைப்பர். திருநாவுக்கரசர் மெய்யன்பு தலைவனுக்கும் அடிமைக்கும் உள்ள இணக்கத்தை ஒத்தது. இதனைத்

தாதமார்க்கம் என்பர். சமண சமயத்திலிருந்து சைவ சமயம் புகுந்தவராதலின் ஆங்காங்கு அச் செய்திகளைக் குறிப்பிடுகின்றனர். இவர் திருப்பாட்டுக்களில் உலகானுபவ முதிர்ச்சி காணப்படும். இவரும் திருஞான சம்பந்தரும் ஒருமையுற்ற அருமை நண்பினர் ஆவர். இவ்விருவருஞ் செய்து கொண்ட நட்பின் திறம் பாராட்டும் தன்மைத்து. 'சொற்குறுதி அப்பர் எனச் சொல்', என்னும் பாட்டு இவரது வாக்குப் படுத்துவத்தை விளக்கும். இப்போதுள்ள இவர் பாட்டுக்களின் தொகை மூவாயிரத்து நானூற்றெழுபத்தாறு. இவரது திருப்பாடல்கள் நான்கு முதல் ஆறாந் திருமுறை வரை மூன்று திருமுறைகளாக வகுக்கப் பட்டுள்ளன. இவரை வழிபட்ட பெரியோர் அப்பூதி அடிகளார்.

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற்
குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற்
பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங்
காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த
மாநிலத்தே. (6)

சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க் கேகாந்தர் அல்லர் ஆகில்;
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யாராய்
ஆஉரித்துத் தின்றுழலும் புலைய ரேனுங்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பர் ஆகில்
அவர்கண்டீர் யாம்வணங்குங் கடவு ளாரே. (7)

நாமார்க்குங் குடியல்லோம் ; நமனை அஞ்சோம் ;
நரகத்தில் இடர்ப்படோம் ; நடலை இல்லோம் ;
ஏமாப்போம் ; பிணியறியோம் ; பணிவோம் அல்லோம் ;
இன்பமே எந்நாளுந் துன்பம் இல்லை.
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதின்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே. (8)

---

## 3. பெருமாள் திருமொழி

விஷ்ணு மூர்த்தியைப் பரம்பொருளாகக் கொண்டு வழி படுஞ் சமயம் வைஷ்ணவம். அச்சமயத்துச் சிறந்த மெய்யடி யார்கள் ஆழ்வார் எனப்படுவர். ஆழ்வார் என்னுஞ் சொல்லுக்குக் கடவுளுடைய குணக்கடலிலே ஆழ்பவர் (ஈடுபடுவர்) என்பது பொருள். வைணவ சமயத்து ஆழ்வார் பன்னிருவருள் குலசேக ரப் பெருமாள் ஒருவர். இவர் கொல்லிநகரில் திருவஞ்சைக் களத்திலே சந்திரகுலத்து வேந்தராகிய திருட விரதருக்கு மைந்தராக அவதரித்தார். இராமபிரானைப் பெருமாள் என் பது வைணவ சம்பிரதாயம். அவரிடத்துப் பெரிதும் ஈடுபா டுடைய ராதலின் இவருக்கும் அப்பெயர் வழங்கலாயிற்று. இவர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி என்பர். இவர் வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லவர். வடமொழி யில் முகுந்தமாலை என்னும் ஓர் அரிய நூலை அருளிச் செய்துள் ளார். இவர் அருளிய திருப்பாடல்கள் மனோபாவனை நிரம்பி யன ; குறிப்புப் பொருள்கள் பொதிந்தன ; அன்பு கனிந்தொ ழுகுவன. இவர் இராமபிரான் வரலாற்றை உள்ளடக்கிப் பல திருப்பாசுரங்கள் பாடியுள்ளார். இவரது கவி நடை ஆற்றொ

மூக்காகத் தெளிந்து செல்கின்றது. தம் பாட்டுக்களின் பயனை ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் ஞானசம்பந்தர் போன்றே கூறுதல் இவருக்கும் இயல்பு.

### திருவேங்கடமுடையான் விஷயம்

இவை திருவேங்கடமுடையான் விஷயமாய்க் குலசேகரப் பெருமாள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாசுரங்களினின்று திரட்டப் பட்டவை. இத் திருப்பாடல்கள் ஆழ்வாரது அருட் செல்வஞ் செறிந்த சொன்னலத்தையும், அவரது தூயவுளத்தே குடிகொண்டிருக்கும் பக்திப் பெருக்கையும் வெள்ளிடை மலை யென விளக்கும். ஒவ்வோர் பாசுரமும் கருத்தால் உயர்ந்து செல்லுந்திறன் நோக்கற்பாலது. திருவேங்கடத்தின் அருமை பெருமைகளை உணர்த்துவார், தாம் அங்கே உறைதலை விரும்பி, இனி எடுக்க விரும்பும் பிறவிகளை முறைமையாகக் கிளந்துரைக் கும் அறிவின் மதுகை மிகவும் பாராட்டத் தக்கது. குருகு, மீன், செண்பகம், தம்பகம், பொற்குவடு, கானாறு, நெறி, படி எனக் கூறியருளிய அருட்பாவலர் கடையில், 'எம்பெருமான் திருமலைமேல் ஏதேனு மாவேனே', என்றருளிய நுட்பம் என்று முள்ளத்து நின்று சுவை பெருக்கும் என்பது திண்ணம்.

ஊனேறு செல்வத் துடற்பிறவி யான் வேண்டேன்;
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்;
கூனேறு சங்கம் இடத்தான்தன் வேங்கடத்துக்
கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே. (9)

ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளுஞ் செல்வமும், மண்ணரசும் யான்வேண்டேன்;
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே. (10)

ஒண்பவள வேலை உலவுதண் பாற்கடலுள்
கண்துயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்குப்
பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துச்
செண்பகமாய் நிற்குந் திருவுடையேன் ஆவேனே. (11)

கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமருஞ் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன் ;
எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலைமேல்
தம்பகமாய் நிற்குந் தவமுடையேன் ஆவேனே. (12)

## 4. திருமங்கை ஆழ்வார்

இவர் திருவாலி திருநகரியிலே திருக்குறையலூரின்கண் நீலன் என்பவருக்குத் திருப்புதல்வராக அவதரித்தவர் ; இவர் குலம் கள்ளர் குலம் என்ப ; அருமைத் திருமனைவியார் குமுத வல்லியார். இவர் ஆறலைக்கும் கள்வராய்த் தொகுத்த பொருளைக் கொண்டு, திருவரங்கம் பெரிய கோயிலில் திருமதில் கட்டுந் திருப்பணி முடித்தார். இவருக்கு 'நாற்கவிப் பெருமாள்', 'பரகாலன்' முதலிய பல திருநாமங்கள் உண்டு. இவரும் திருஞான சம்பந்தப் பெருமானும் ஒருவரை ஒருவர் சந்தித்து, வாதித்தனரென ஒரு சிலரும், அளவளாவினரென வேறு சிலரும் கூறுவர். அதற்கு ஆதாரமாக அவர் காட்டும் பாட்டுக்கள் தமிழ் நாவலர் சரிதையில் காணப்படுவனவே ; வேறு தக்க ஆதாரம் யாதும் இன்மையால் அவை கொள்ளப்படுவன வல்ல. இவர் கி. பி. எட்டாம் நூற்றூண்டின்கண் இருந்தனர் என்பர். இவரே பன்னிரு ஆழ்வார்களுள் மிகுதியாகத் திருப்பாசுரங்கள் அருளிச் செய்தவர்.

இவர் திருப்பாசுரங்கள் செந்தமிழ்வளந் தேக்கப்பெற்றுப் பல அரிய கருத்துக்கள் உடையனவாய்ப் பல திறப்பட்டிருக்கின்றன. நெடுந்தாண்டகம், குறுந்தாண்டகம், திருவெழுகூற்

றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் முதலியன இவர் அருளிச் செய்தவை.

பாருருவில் நீர்எரிகால் விசும்பும் ஆகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே என்ன நின்ற
இமையவர்தந் திருஉருவே றெண்ணும் போது
ஓருருவம் பொன் உருவம் ஒன்று செந்தீ
ஒன்றுமா கடல்உருவம் ஒத்து நின்ற
மூஉருவுங் கண்டபோ தொன்றுஞ் சோதி
முகில்உருவம் எம்அடிகள் உருவந் தானே. (13)

## 5. திருப்போரூர்ச் சந்நிதி முறை

கீழ்வரும் மூன்று அருஞ் செய்யுட்களும் திருப்போரூர்ச் சந்நிதி முறை என்னும் சிறந்த நூலினின்றும் எடுக்கப்பட்டன. சந்நிதி முறை ஆசிரியர் சிதம்பரசுவாமிகள் என்பவர். இவர் மதுரைமா நகரில் பிறந்தவர் என்பவர்; இவர் குமாரதேவருக்கு நன் மாணவர்; கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், ஒழிவி லொடுக்கம் முதலிய நூற்களுக்குத் தெளிவான உரை எழுதிய வர்; பஞ்சாதிகார விளக்கம் என மற்றோர் செய்யுள் நூலும் பாடினவர்; திருப்போரூர்த் திருத்தலத்தை உத்தாரணஞ் செய் தவர். இவர் இயற்றிய உரைகளால் இவரது பெரும்புலமையை யும், நுண் மதியையும் இனிது உணரலாகும்; ஞானனுபவத்தை ஒழிவிலொடுக்க உரை எடுத்துக் காட்டும். சந்நிதிமுறைச் செய் யுட்கள், நலம் பழுத்தொழுகுவன; இயற்சொற்களான் இயன் றிருத்தலிற் சிறிது கல்வியுடையாரும் சுவைக்கத் தக்கன. வடித்த சொற்களால் இனித்த நடையில் எழுதுவது இவருக்கு இயல்பு. முருகப் பெருமான்மேல் இவர் பாடியருளிய பாடல்கள்

கன்மனத்தையுங் கரைக்கும் என்பதில் யாதும் ஐயமின்று. 'இரசதாளிக்கனியே', 'திராட்சைப்பழமே', என்ற இன்னோரன்ன சொற்களையும் மிகுதியும் இவர் நூலகத்துக் காணலாகும். பல வகைப்பட்ட பாவினங்களால் சந்நிதி முறையைப் பாடி முடித்துள்ளார். இவர் சைவ சமயத்தில் பெரிதும் பற்றுடையவர். பாச்செய்யுள் கற்கப் புகும் மாணவர் துதிநூலில் முதன் முதல் இவர் நூலைக் கற்பின் பெரும்பயன் அடைவர்.

சோம கிரணப் பெருங்கருணை
சுரந்த முகங்கள் ஓர் ஆறும்,
சுருதி வழுத்தும் பன்னிரண்டு
தோளும் நீபத் தொடைமார்பும்,
காமர் நிறச்செம் பட்டாடைக்
காட்சி மருங்கும் சிறுசதங்கை
கலித்த உபயத் திருத்தாளும்,
கடையேன் துதிக்கப் பணிப்பாயே;
சேம நிதியே, சுரர்பதியே,
தெய்வத் தருவே, மலர்மருவே,
செறிபூ ரணமே, ஆரணமே,
சிறியேன் உயிருக் கோர்உயிரே,
பூமன் அறியாப் பிரணவத்தின்
பொருளைப் பகரும் பூங்கிளியே,
போற்றும் அடியார்க் கோர் அருளே,
போரூர் முருகப் பெருமானே. (14)

எண்ணி லாத நெடுங்காலம்
எண்ணி லாத பலபிறவி
எடுத்தே, இளைத்திங் கவைநீங்கி
இம்மா னுடத்தில் வந்துதித்து

மண்ணின் வாழ்க்கை மெய்யாக
மயங்கி உழன்றல்' அடியேன்உன்
மாறாப் பெருமை தரும்பாத
வனசத் துணையென் றடைவேனே!
கண்ணின் மணியே, உயிர்க்களியே,
கருணைப் புயலே, சுகக்கடலே,
கச்சித் தாய்உச் சியைமோந்து
கண்ணோ டணைக்குந் திருத்தாளா,
புண்ணி யோர்எண் ணியகரும்பே,
பொழியும் மதவா ரணமுகத்தோன்
பொற்பார் துணையே, அற்புதனே,
போரூர் முருகப் பெருமானே. (15)

---

## 6. திருவட்பா

இத்திருப்பாடல்கள் திருவருட்பா என்னும் அரிய நூலினின்றும் எடுக்கப்பட்டன. திருவருட்பா ஆசிரியர் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள். இவர் கருணீகர் குலத்திலே கி. பி. 1823-ஆம் ஆண்டிலே பிறந்தவர். இவருக்குத் 'திருவருட் பிரகாச வள்ளலார்' என்ற சிறப்புப் பெயர் வழங்கும். இவர் திராட்சா பாகமாகச் செய்யுள் செய்வதில் பேராற்றல் வாய்ந்தவர், உலகாநுபவ விஷயங்களை அமைத்துப் பாடுவதில் அதிசமர்த்தர். இவர் அன்பின் திறமும், உயிர்களின்பால் இவருக்கிருந்த அருளின் மாட்சியும் இவர் அருளிச் செய்த திருப்பாடல்களைப் படிப்பவர் நன்குணர்வர். இவரது நடை சிதம்பர சுவாமிகளின் நடையையும், தத்துவராயர் நடையையும் பெரிதும் ஒத்து நடக்கும். அன்னோர் நூல்களிலுள்ள பல சொற்றொடர்களையும் இவர் நூலின்கண் காணலாம். சைவசமய குரவர் நால்வரையும் பற்றிப் பாடிய இவர் பாக்கள் மிகவுருக்க முள்ளவை. அவற்றுள் சில இங்குத் தரப்படும்:

### திருஞான சம்பந்தர்

சீரார் சண்பைக் கவுணியர்தம்
தெய்வ மரபில் திகழ்விளக்கே,
தெவிட்டா துளத்தில் தித்திக்குந்
தேனே, அழியாச செல்வமே,
காரார் மிடற்றுப் பவளமலைக்
கண்ணின் முளைத்த கற்பகமே,
கரும்பே, கனியே, என்னிரண்டு
கண்ணே, கண்ணிற் கருமணியே,
ஏரார் பருவம் மூன்றில்உமை
இனிய முலைப்பால் எடுத்தூட்டும்
இன்பக் குதலை மொழிக்குருந்தே,
என்ஆர் உயிருக் கொருதுணையே,
பேரார் ஞான சம்பந்தப்
பெருமானே, நின் திருப்புகழைப்
பேசு கின்றோர் மேன்மேலும்
பெருஞ்செல் வத்திற் பிறங்குவரே. (16)

### திருநாவுக்கரசர்

தேவரெலாந் தொழுந்தலைமைத் தேவர் பாதத்
திருமலரை முடிக்கணிந்து திகழ்ந்து நின்ற
நாவரசே, நான்முகனும் விரும்பு ஞான
நாயகனே, நல்லவர்க்கு நண்பனே, எம்
பாவமெலா மகற்றியருட் பான்மை நல்கும்
பண்புடைய பெருமானே, பணிந்து நின்பான்
மேவவிருப் புறுமடியர்க் கன்பு செய்ய
வேண்டினேன் அவ்வகைநீ விதித்தி டாயே. ()

சுந்தரர்

தேன்படிக்கும் அமுதாம்உன்
திருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போதென்னை
நான்அறியேன் நாவொன்றோ
ஊன்படிக்கும், உளம்படிக்கும்,
உயிர்படிக்கும், உயிர்க்குயிருந்
தான்படிக்கும் அநுபவங்காண்
தனிக்கருணைப் பெருந்தகையே. (18)

மாணிக்கவாசகர்

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து, பால்கலந்து, செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே. ()



# II. நீதி

## 1. திருவள்ளுவர்

இவர் கடைச்சங்க காலத்திருந்த முத்தமிழ்ப்புலமையும், வித்தகக் கவியும் வாய்ந்த பெரும்புலவர். இவருக்கு ஒப்பாவார் ஒருவருமிலர். இவரைப் புகழாத தமிழ்ப்புலவரும், இவர் பாட்டுக் களையும், கருத்துக்களையும் ஏற்றுக்கொள்ளாத பாவலரும் இலர். இவரது பெரும்புலமைத் திறனையும், உலகாநுபவ ஏற்றத்தை யும், நுண்மதி வன்மையையுங் கண்டு, மேனாட்டு அறிஞரும் இவரை உலகத்துக்கோர் பேரறிஞர் என வியந்து கூறுவர்.

இவர் தந்தையார் யாளிதத்தன் என ஞானாமிர்தகாரர் கூறுவர். பிறர் பகவன் என்பர். இவரதியற் பெயர் வள்ளுவர் என்பது. இவர் மயிலாப்பூரின்கண் வளர்ந்தவர் என்று கர்ண பரம்பரை வழங்கும். இவர் அருளிச் செய்த 'திருக்குறள்' என்னும் அரும்பெரும் சீர்த்திவாய்ந்த நூல் உத்தரவேதம் எனப் போற்றிக் கொள்ளப்படுவது. இவரது குறள் வெண்பாக்களின் தனி நயங்கள் அளப்பரியன. இவர் பாக்கள் சுருங்கிய வாய்பாட்டான் பரந்த பொருள்களை அடக்கிக்கொண்டிருப்பது எத்தகையோருக்கும் வாய்க்காதது. இவர் எதுகை வாராத இடங்களிலெல்லாம் வழியெதுகை வைப்பர்; மோனை முட்டுப்பட்ட விடத்தே ஓசை நலத்தால் நிரப்புவர்; ஆராய்ந்து அளந்து ஒவ்வொரு சொல்லையும் பெய்துரைப்பர். இவர் இடத்துக்கேற்ற படி சமத்காரம் தோன்றவுஞ் செய்யுள் செய்வர். இவர் நூலில் எல்லாப் பொருள்களும் அடங்கி யுள்ளன. புறசமயத்தினரும் இவர் நூலைத் தம் மதத்துச் சிறந்த வேதங்களோடு ஒப்பாகக் கொள்வர். இவர் இயற்றியருளிய திருக்குறள் என்னும் விழுமிய நூலின் அருமை பெருமைகளை நோக்கி, அதனை மேனாட்டவர் பலரும் தம்தம் மொழிகளில் மொழிபெயர்த்துள்ளார். இவரது திருவுருவச்சிலை இங்கிலந்து தேசக் காட்சிசாலையில் வைக்கப்பட்டுளது. இவரது சமயம் இன்னதென நன்கு அறியப் பிரபல ஆதாரங்கள் இல. இவர் வைதிக சமயத்தினர் என்பதுமட்டும் அகச் சான்றுகளாலேயே நாட்டலாகும். இவர் நூலின் சுருக்கத்தையும், அதிலடங்கிய பொருட் பெருக்கத்தையும், 'அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த குறள்', என்னும் பாட்டால் செவ்விதின் உணரலாகும். 'சிந்தைக் கினிய செவிக் கினிய வாய்க்கினிய, வந்த இருவினைக்கும் மாமருந்து' என்றும், 'வந்திக்க சென்னி வாய் வாழ்த்துக நன்னெஞ்சம் சிந்திக்க கேட்க செவி' என்றும் வியந்து கூறிய புலவர் பெருமக்கள் மொழிகளை நோக்குக.

இப்பாட்டுகள், பல அதிகாரங்களினின்றும் திரட்டப்பட்டுள்ளன.

கற்றதனால் ஆய பயன்என்கொல்? வால்அறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். (1)

செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார். (2)

அந்தணர் என்போர் அறவோர்; மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். (3)

மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன்
ஆகுல நீர பிற. (4)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்றாங்கு
ஐம்புலத்தா றோம்பல் தலை. (5)

தெய்வந் தொழாஅள், கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. (6)

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்; மற்றவர்
சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு. (7)

மகன் தந்தைக் காற்றும் உதவி 'இவன்தந்தை
என்னோற்றான் கொல்?' எனுஞ் சொல். (8)

அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. (9)

மோப்பக் குழையும் அனிச்சம்; முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. (10)

இனிய உளவாக, இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று. (11)

காலத் தினால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. (12)

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி. (13)

அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆர்இருள் உய்த்து விடும். (14)

யாகாவார் ஆயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (15)

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (16)

அழுக்கா றெனஒரு பாவி திருச்செற்றுத்
தீஉழி உய்த்து விடும். (17)

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின், சாதல்
அறங்கூறும் ஆக்கந் தரும். (18)

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல். (19)

தீயவை தீய பயத்தலால், தீயவை
தீயினும் அஞ்சப் படும். (20)

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான்; மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். (21)

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேர்அறி வாளன் திரு. (22)

ஒப்புரவி னால்வருங் கேடெனின், அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. (23)

நல்லா றெனினுங் கொளல்தீது ; மேல் உலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. (24)

தோன்றிற் புகழொடு தோன்றுக ; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று. (25)

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்; பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள. (26)

அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று. (27)

உள்ளத்தால் உள்ளலும் தீதே, பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல். (28)

பொய்மையும் வாய்மை இடத்த, புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின் (29)

எல்லா விளக்கும் விளக்கல்ல ; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. (30)

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க ; காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம். (31)

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்,
புணரின், வெகுளாமை நன்று. (32)

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும். (33)

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க, தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. (34)

## 2. நாலடியார்

இது கடைச் சங்கம் மருவிய நூல்; பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று; சமண முனிவர் பலரால் இயற்றப் பட்ட நானூறு வெண்பாக்களை யுடையது; பதுமனார் என்னும் புலவரால் தொகுக்கப்பட்டது. இதைப்பற்றி வழங்கும் கதை ஒன்றுண்டு. அது வருமாறு: 'ஒரு காலத்தில் சமண முனிவர் எண்ணாயிரவர், பெரிய கருப்பினால் தமது பிறந்தகத்தை விட்டுப் பாண்டி நாட்டை அடைந்து, பாண்டியனால் பேணப்பட்டனர். சின்னாட்கள் சென்றதும், தங்கள் நாட்டில் கருப்பு நீங்கிச் செழிப்புண்டாக, அவர்கள் பாண்டியனைத் தங்களுக்குத் தங்கள் நாட்டிற்கேக விடை தரும்படி வேண்டினர். அவ்வேந்தன் அவர்களை விட்டுப் பிரிய விருப்பின்றி, அவர்கள் வேண்டுகோளுக் கிசையானாயினன். இங்ஙனம் நாட்பல செல்ல, முனிவர்கள் ஓர் நாள் இரவில் யாரும் அறியா வண்ணம் பாண்டி நாட்டை அகன்றனர். பொழுது புலர்ந்ததும் முனிவர்கள் சென்றது கேட்டு, அவர் உறைவிடங்களைத் துருவிப் பார்க்க, ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு பாட்டு எழுதப்பட்ட ஒவ்வொரு ஓலை நறுக்கு காணப்பட்டது. அவை ஒன்றுக்கொன்று பொருத்தமின்றி முரண்பட்டிருந்தன. அரசன் மன வெரிவால், அவற்றை வைகை யாற்றில் எறியும்படி கட்டளையிட்டான். அவற்றுள் நானூறு பாட்டுக்கள் எதிர் ஏறிக் கரையில் ஒதுங்கின. அவற்றைத் திரட்டி, பாண்டியன் ஒரு நூலாக உருப்படுத்தினன்,' என்பதாம்.

இந்நூல் நீதி நூல்களுள் திருக்குறளுக்கு இரண்டாவதாக மதிக்கப்படும். இதன் பெருமையை, 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' என்னும் பழமொழியும், 'பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்', என்னும் அவ்வையார் அமுதவாக்கும் வலியுறுத்தும். இதிலுள்ள

வெண்பாக்கள் நாலடிகளா லாகியதனால் இது நாலடியார் எனப் பெயர் பெற்றது; ஆர் விகுதி உயர்வுப் பொருளில் வந்தது. பாட்டுக்கள் நிரம்பிய கருத்துடையனவாய் இன்னோசை பெற்றுக் கரும்பெனச் சுவைக்கின்றன. இதிலுள்ள பல பாட்டுக்கள் திருக்குறள் நூலுக்கும் முற்பட்டன என்பர் சிலர். திருக்குறளோடு ஒத்த கருத்துடையனவும், ஒத்த உவமை உடையனவுமாகிய பல செய்யுட்கள் இந்நூலில் காணப்படும். சில கருத்துக்கள் திருக்குறளிலும் காணப்படாதனவாகவும், பொருள் புலப்பாடு சிறந்தனவாகவும் இருக்கின்றன. இங்கே தரப்படும் பாக்கள் ஆய்ந்தெடுக்கப்பட்டன ஆதலின், அவற்றுள் இக்கூறிய தன்மைகள் சிலவற்றைக் காணலாம்.

குடம்நீர் அட்டுண்ணும் இடுக்கட் பொழுதுங்
கடல்நீர் அறவுண்ணுங் கேளிர்—வரினுங்
கடன்நீர்மை கையாறாக் கொள்ளும் மடமொழி
மாதர் மனைமாட்சி யாள். (35)

இனியார்தம் நெஞ்சத்து நோய்உரைப்ப, அந்நோய்
தணியாத உள்ளம் உடையார்—மணிவரன்றி
வீழும் அருவி விறல்மலை நன்னாட,
வாழ்வின் வரைபாய்தல் நன்று. (36)

கல்லாக் கழிப்பர் தலையாயார்; நல்லவை
துவ்வாக் கழிப்பர் இடைகள்;—கடைகள்
இனிதுண்ணேம், ஆரப் பெறேம்யாம் என்னும்
முனிவினால் கண்பா டிலர். (37)

தலையே தவமுயன்று வாழ்தல்; ஒருவர்க்கு
இடையே இனியார்கண் தங்கல்;—கடையே

புணராதவென் றெண்ணிப் பொருள்நசையால் தம்மை
உணரார்பின் சென்று நிலை. (38)

எறிஎன் றெதிர்நிற்பாள் கூற்றம்; சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும்பிணி;—அட்டதனை
உண்டி உதவாதாள் இல்வாழ்பேய்; இம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை. (39)

ஒருநன்றி செய்தவர்க் கொன்றி எழுந்த
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்;—கயவர்க்கு
எழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்
எழுநூறுந் தீதாய் விடும் (40)

கணமலை நன்றுடை, கண்ணின் ஒருருவர்
குணனேயுங் கூறற் கரிதால்—குணன்அழுங்கக்
குற்றம் உழைநின்று கூறுஞ் சிறியவர்கட்கு
எற்றால் இயன்றதோ நா. (41)

சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்—எக்காலும்
முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை
இந்திரனா எண்ணி விடும். (42)

பொற்கலத் தூட்டிப் புறந்தரினும் நாய்பிறர்
எச்சிற் கிமையாது பார்த்திருக்கும்—அச்சீர்
பெருமை உடைத்தாக் கொளினுங்கீழ் செய்யுங்
கருமங்கள் வேறு படும். (43)

கற்றனவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்துந்—தானுரைப்பின்

மைத்துனர் பல்கி மருந்தில் தணியாத
பித்தன்என் றெள்ளப் படும். (44)

குலந்தவங் கல்வி குடிமைமூப் பைந்தும்
விலங்காமல் எய்தியக் கண்ணும்—நலஞ்சான்ற
மையறு தொல்சீர் உலகம் அறியாமை
நெய்இலாப் பாற்சோற்றின் நேர். (45)

பெருங்கடல் ஆடிய சென்றார், 'ஒருங்குடன்
ஓசை அவிந்தபின் ஆடுதும்,'—என்றற்றால்
இற்செய் குறைவினை நீக்கி, அறவினை
மற்றறிவாம் என்றிருப்பார் மாண்பு. (46)

இசையும் எனினும் இசையா தெனினும்
வசைதீர எண்ணுவர் சான்றோர்;—விசையின்
நரிமா உளங்கிழித்த அம்பினில் தீதோ
அரிமா பிழைப்பெய்த கோல். (47)

தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றி, மற்று
எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்? என்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன். (48)

---

## 3. ஆசாரக் கோவை

இது கடைச்சங்கம் மருவிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று; பெருவாயின் முள்ளியார் என்னும் புலவர் பெருமான் இயற்றியது; நூறு வெண்பாக்களை யுடையது. வெண்பா விகற்பங்கள் பலவற்றை இதன்கண் காணலாம். இவ்வாசிரியர் சைவ மதத்தினர் என்பது தற்சிறப்புப்பாயிரத்தால் வெளிப்

படை. இந்நூலிலுள்ள கருத்துக்கள் வடமொழி நூல்களி னின்றும் தேர்ந் தெடுக்கப்பட்டவை. பல வகைப்பட்ட ஆசாரங்களை எடுத்துக் கோத்த நூலாதலின் ஆசாரக்கோவை எனப் பெயர் பெற்றது. இதற்கு ஆசிரியர், 'ஒழுக்கக்கோவை' எனத் தமிழ் மொழியால் பெயர் கூறாதது, வடமொழியினின்று திரட்டப்பட்ட உண்மை விளக்கிய போலும். பாட்டுக்கள் மிக வும் இனியவாய், செவ்வியின் பொருள் விளக்குவனவாய், அழ குற அமைந்துள்ளன. பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் இன் னின்ன என்பதைக் கீழ்வரும் வெண்பாவால் உணர்க.

'நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி—மாமூலம்
இன்னிலைசொல் காஞ்சியுடன் ஏலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.'

ஆசாரங்கட்குக் காரணம்

நன்றி அறிதல், பொறை உடைமை, இன்சொல்லோடு
இன்னாத எவ்வுயிர்க்குஞ் செய்யாமை, கல்வியோடு
ஒப்புர வாற்ற அறிதல், அறிவுடைமை,
நல்லினத் தாரோடு நட்டல் இவைஎட்டும்
சொல்லிய ஆசார வித்து. (49)

வைகறை எழுந்து சிந்திப்பதும் செய்வதும்

வைகறை யாமந் துயில்எழுந்து, தான் செய்யும்
நல்லறமும் ஒண்பொருளுஞ் சிந்தித்து, வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக ; என்பதே
முந்தையோர் கண்ட முறை. (50)

சில அநாசாரம்

உடுத்தலால் நீராடார் ; ஒன்றுடுத் துண்ணார் ;
உடுத்தாடை நீருட் பிழியார் ; விழுத்தக்கார் ;

ஒன்றுடுத் தென்றும் அவைபுகார் என்பதே
முந்தையோர் கண்ட முறை. (51)

ஏதம் தருவன

தன்னுடம்பு தாரம் அடைக்கலம் தன்னுயிர்க்கென்று
உன்னித் துவைத்த பொருளோ டிவைநான்கும்
பொன்னினைப்போல் போற்றிக் காத்துய்க்க; உய்க்காக்கால்
மன்னிய ஏதந் தரும். (52)

காக்கும் வகை

நந்தெறும்பு தூக்கணம் புள்காக்கை என்றிவைபோல்
தங்கருமம் நல்ல கடைப்பிடித்துத்—தங்கருமம்
அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்
எப்பெற்றி யானும் படும். (53)

---

## 4. புறநானூறு

புறநானூறு என்பது சங்கத்தாரால் செய்யப்பட்ட எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று; புறப்பொருளைப் பற்றிய நானூறு அகவற்பாக்களை உடையது; புலவர் பலரால் பாடப்பட்டது. புறப்பொருள் என்பது அறத்தையும், பொருளையும் பற்றிய பொருள். இந்நூல் கடைச்சங்க காலத்ததாகலின் இற்றைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது. இது தமிழ் நாட்டுப் பழைய வழக்க ஒழுக்கங்களுள் பலவும், தமிழரசர்களாகிய சேர சோழ பாண்டியர்களைப் பற்றிய சில விஷயங்களும் தெரிவதற்குக்காரணமாக உள்ளது; சொற்சுவை பொருட்சுவை துறுமித் திகழ்வது; பண்டை உண்மையைப் பாரித்துரைப்பது. இந்நூலின் சொன்னடை பொருணடைகளை எடுத்துக்கொண்ட நூலாசிரியரும், உரையாசிரியரும் பலராயின் இதன் பெருமை சொல்ல வேண்டுவதோ? இதன் சுவையைச்

சிறிதேனும் உணராதிருத்தல் தமிழ் மக்கட்குப் பெரும் பிழையாகும். நம் முன்னோர் பெருமையையும், தன்மைகளையும் பளிங்கெனக் காட்டும் இன்னோரன்ன பண்டை நூல்களைக் கல்லாது கழிப்போமாயின், நாம் எவ்வகையில் ஏற்றம் அடைவோம்? தமிழ் மொழியைக் கற்று, அதனைப் பிறர்க்கும் கற்பித்து மேன்மேலும் வளர்த்தலைக் காட்டிலும் தலையாய அறம் தமிழர்க்கு வேறின்று என்பதை இங்கு வலியுறுத்த என் மனம் பெரிதும் விழைகின்றது.

கல்விச் சிறப்பு

உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும்;
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே. (54)

மக்கட் பேறு

படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே. (55)

3 டமை

ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே ;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே ;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே ;
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே. (56)



## III. தமிழ்

### 1. திருவிளையாடற் புராணம்

கீழ்வரும் இரண்டு கவிகளும் திருவிளையாடற் புராணத்தினின்று தெரிந்தெடுக்கப்பட்டன. திருவிளையாடற்புராணம் பரஞ்சோதிமுனிவர் இயற்றியது. இவர் தஞ்சை ஜில்லாவிலுள்ள வேதாரணியத்தில் பிறந்தவர். இவர் குலம் அபிடேகத்தர் குலம் ; சமயம் சைவம் ; காலம் இற்றைக்கு ஏறக்குறைய இருநூற்றெழுபது ஆண்டுகட்குமுன் என்பர். இவர் வடமொழிப் புலமையும் வாய்ந்தவர். இவர் பாடல்கள் செம்பாகம் பொருந்தியன. இவர் நடை பழுத்துச் சுவையில் விஞ்சுகிறது. இவர் நடையைக் கம்பர் நடைக்கு ஒப்பிடலாம்.

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ ! (1)

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும், முதலை
உண்ட பாலனை அழைத்ததும், எலும்புபெண் ணுருவாக்

கண்டதும், மறைக் கதவினைத் திறந்ததும், கன்னித்
தண்டமிழ்ச் சொலோ? மறுபுலச் சொற்களோ? சாற்றீர். ()

---

## 2. மனோன்மணீயம்

இந்நூலாசிரியர் ஏறக்குறைய இருபது ஆண்டுகட்கு முன் தமிழகத்தில் புலவர் ஏறுக விளங்கிய திருவனந்தபுரம் சுந்தரம் பிள்ளை என்பவர். இவர் அகிநுட்ப அறிவும், சிறந்த தமிழ்ப் புலமையும் உடையவர். ஆராய்ச்சி முறை இன்னதெனத் தமிழருக்குத் தெரித்துணர்த்தியவர் இவரே. தம் உள்ளத்தில் தோன்றியவற்றை அஞ்சாது எடுத்துரைக்கும் இவரது ஆண்மை நனி பெரிதும் மதித்தற்பாலது. மனோன்மணீயம் என்னும் செந்தமிழ்ச்சுவை நிரம்பிய நாடகம் ஒன்றே இவரது சீரிய புலமைத் தெளிவையும், கூரிய அறிவின் ஆழத்தையும், அகற்சியையுங் காட்டுதற்கு உறுசான்றாகும். பின்வருஞ் செய்யுட்கள் எத்தகையினர் மனத்தையுங் கவரத்தக்கவை.

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்,
கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையாளமுந் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்,
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே. ()

கடல்குடித்த குடமுனியுன் கரைகாணக் குருநாடில்
தொடுகடலை உனக்குவமை சொல்லுவதும் புகழாமே. (4)

ஒருபிழைக்கா அரனார்முன் உரையிழந்து விழிப்பாரேல்
அரியதுனை இலக்கணமென் றறைவதுமற் புதமாமே. (5)

சதுமறைஆ ரியம்வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழிநீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே. ()

வேகவதிக் கெதிரேற விட்டதொரு சிற்றேடு
காலநதி நினைக்கரவாக் காரணத்தின் அறிகுறியே. (7)

கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையார்உன் வாசகத்தில் ஒருபிரதி கருதினதே. (8)

பத்துப்பாட் டாதிமனம் பற்றினர் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே.

வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மநுவாதி ஒருகுலத்துக் கொருநீதி. (10)



# IV. வருணனை



## 1. அந்திமாலைச் சிறப்பு

பின்வருவது மணிமேகலையினின்றும் எடுக்கப்பட்டது. அதனை இயற்றியவர் சீத்தலைச்சாத்தனார் என்னும் நல்லிசைப் புலவர். அஃது ஐம்பெருக் காப்பியங்களுள் ஒன்று. ஏனைய நான்கும் சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், குண்டலகேசி, வளையாபதி என்பன. பின் இரண்டும் தமிழர் தவக்குறைவால் இதுகாறும் வெளிவந்தில.. எவர் புதைத்து வைத்திருக்கின்றனரோ !. மணிமேகலையின் புலமை பழுத்தொழுகும் தீவிய நடைக்கு இணை தமிழ்மொழியில் எங்கும் இல்லை. இவ்வடிகளில் அமைந்துள்ள அழகையும், ஓசை இனிமையையும், தன்மை அணியையும் பன்முறை படித்தின்புறுக.

அன்னச் சேவல் அயர்ந்துவிளை யாடிய
தன்னுறு பெடையைத் தாமரை அடக்கப்,
பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்டு
ஓங்கிருந் தெங்கின் உயர்மடல் ஏற,
அன்றிற் பேடை அரிக்குரல் அழைஇச்
சென்றுவீழ் பொழுது சேவற் கிசைப்பப்,
பவளச் செங்காற் பறவைக் கானத்துக்
குவளை மேய்ந்த குடக்கட் சேதா
முலைபொழி தீம்பால் எழுதுகள் அவிப்பக்
கன்றுநினை குரல மன்றுவழிப் படர,
அந்தி அந்தணர் செந்தீப் பேணப்
பைந்தொடி மகளிர் பலர்விளக் கெடுப்ப,
யாழோர் மருதத் தின்னரம் புளரக்,
கோவலர் முல்லைக் குழல்மேற் கொள்ள,
அமரக மருங்கிற் கணவனை யிழந்து
தமரகம் புகூஉம் ஒருமகள் போலக்
கதிர்ஆற்றுப் படுத்த முதிராத் துன்பமோடு
அந்தி யென்னும் பசலை மெய்யாட்டி
வந்திறுத் தனளால் மாநகர் மருங்கென. (1)

---

## 2. இராமபிரான் கடல் காணுதல்

கீழ்வருஞ் செய்யுட்கள் கம்பராமாயணத்தினின்றும் தெரிந்தெடுக்கப்பட்டன. கம்பர் மிகவும் சிறந்த தமிழ்ப்பாவலர்களுள் ஒருவர். அவர் செந்நாப் புலமையையும், நல்லிசையையும் அறியாதார் ஒருவருமிலர். இராமாயணமாகிய பார காவியத்தைத் தமிழில் நவரசப் பஞ்சமாகச் செய்த கவிஞர் பெருமானாதலின் இவர் உலகத்தார் உள்ளத்துள் என்றும் வீற்றிருப்பவராவர்.

மனோபாவனைகளை எழுப்பும் இவரது அருங்கவிகள் பலவகை அலங்காரங்கள் அமையப் பெற்று அழகு பழுத்தொழுகுகின்றன. 'கம்பசூத்திரம்' 'கம்ப சித்திரம்,' 'கம்பர் வீட்டுக் கட்டுத் தறியுங் கவிபாடும்,' 'கல்வியிற் பெரியவர் கம்பர்,' 'கவிச்சக்கிரவர்த்தி கம்பர்' என வழங்கும் புனைந்துரைகளால், இவர் கவிநயத்தையும், பாவன்மையையும் அறிவின் ஆற்றலையும் தெள்ளிதின் அறிக. இராமாயணத்தைப் பதினாயிரத்து ஐந்நூறு பாக்களால் விரித்துப் பாடியதால் வித்தார கவி என்றும், 'விழுந்த ஞாயிறு எழுவதன்முன் மறைவேதிய ருடனாராய்த் தெழுந்த ஞாயிறு விழுவதன்முன் கவிபாடின தெழுநூறே,' என்றதனால் ஆசுகவி என்றும், மடக்கு, யமகம் முதலிய சொல்லணிகள், பொருந்தப் பாடியதனால் சித்திரகவி என்றும், சொல்லும்பொருளுந் தித்திக்கப் பாத்தொடுத்தலின் மதுரகவி என்றும் இவை யாவும் ஒருங்கு வாய்க்கப் பெற்றமையால் நாற்கவிராசர் என்றும் உத்தமக் கவி என்றும் புகழப்படுபவர்.

இவர் சோழவள நாட்டிலே, திருவழுந்தூரின்கண் உவச்சர் குலத்தில் ஆதித்தர் என்பவருக்குப் புதல்வராகப் பிறந்தவர்; அக ளங்க சோழனுடைய அவைக்களப் புலவராக விளங்கியவர்; சடையப்ப முதலியாரால் ஆதரிக்கப்பட்டவர். 'கம்பர்' என்பது இவரது இயற்பெயர். இவர் சமயம், திருமாலின் அவதாரமாகிய இராமபிரானைக் குறித்த இராமாயண காவியத்தைப் பாடியிருத்தலாலும், அவரையே பரமகாரணரெனவும் மும்மூர்த்திகட்கும் முதல்வரெனவுங் கூறியிருத்தலாலும் வைணவம் என்று ஒரு சாராரும், தம் அருந்தவச் செல்வனுக்கு அம்பிகாபதி என்று பெயர் சூட்டியதனாலும், சைவசமயத்தைச் சார்ந்த காளிகோட்ட அருச்சகராகிய உவச்சர் குலத்தில் பிறந்தமையானும், இராமாயணத்துப் பலவிடங்களில் இந்திரன், அயன், திருமால், சிவன் என முறைப்படுத்தி ஓதியிருத்தலினாலும் சைவம் என்று பிறி

தொரு சாராருங் கூறுவர். இவர் காலம் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது ஆகும்.

இங்கே தந்துள்ள ஏழு செய்யுட்களும் சீதாபிராட்டியாரைப் பிரிந்து வருந்தும் இராமபிரான் கடலைக் கண்டபோது அக்கடற் காட்சி இவ்வாறிருந்ததென வருணித்துக் கூறுகின்றன. இராம பிரானது மனநிலையையும், கடலின் இயற்கைக் காட்சியையும் நனிபொருத்திக் கற்போர் உள்ளங் கங்கு கரையற்ற இன்ப வெள்ளத்தில் திளைக்கப் பாடிய கம்பரது கவிகள் நெடிதூழி வாழ்வனவாக.

பொங்கிப் பரந்த பெருஞ்சேனை
புறத்தும் அகத்தும் புடைசுற்றச்
சங்கிற் பொலிந்த கையாளைப்
பிரிந்த பின்பு தமக்கினமாங்
கொங்கிற் பொலிந்த தாமரையின்
குழுவுந் துயில்வுற் றிதழ்குவிக்கும்
கங்குற் பொழுதுந் துயிலாத
கண்ணன் கடலைக் கண்ணுற்றான். (2)

'சேய காலம் பிரிந்தகலத்
திரிந்தான்; மீண்டுஞ் சேக்கையின்பால்
மாயன் வந்தான்; இனிவளர்வான்,'
என்று கருதி வருந்தென்றல்,
தூய மலர்போல் நுரைத்தொகையும்
முத்துஞ் சிந்திப் புடைசுருட்டிப்
பாய ஊதறிப் படுப்பதே
யொத்த திரையின் பரப்பம்மா. (3)

நென்னற் கண்ட திருமேனி
இன்று பிறிதாய் நிலைதளர்வான்
தன்னைக் கண்டும் இரங்காது
தனியே கதறுந் தடங்கடல்வாய்ப்
பின்னற் றிரைமேற் றவழ்கின்ற
பிள்ளைத் தென்றல், கள்ளுயிர்க்கும்
புன்னைக் குறும்பூ நறுஞ்சுண்ணம்
பூசா தொருகாற் போகாதே. (4)

சிலைமேற் கொண்ட திருநெடுந்தோட்
குவமை மலையுஞ் சிறிதேய்ப்ப
நிலைமேற் கொண்டு மெலிகின்ற
நெடியோன் தன்முன், படியேழும்
தலைமேற் கொண்ட கற்பினாள்
மணிவா யென்னத் தனித்தோன்றிக்
கொலைமேற் கொண்டார் உயிர்குடிக்குங்
கூற்றங் கொல்லோ! கொடிப்பவளம். (5)

தூர மில்லை, மயிலிருந்த
சூழ லென்று மனஞ்செல்ல
வீர வல்லி நெடுமானம்
வெல்ல நாளும் மெலிவானுக்கு
ஈர மில்லா நிருதரோ
டென்ன வுறவுண் டுனக்கேழை
மூரன் முறுவற் குறிகாட்டி
முத்தே! உலகை முடிப்பாயோ! (6)

இந்து அன்ன நுதற்பேதை
இருந்தாள் நீங்கா இடர்கொடியேன்

தந்த பாவை தவப்பாவை
தனிமை தகவோ எனத்தளர்ந்து,
சிந்து கின்ற நறுந்தரளக்
கண்ணீர் ததும்பித் திரைத்தெழுந்து,
வந்து வள்ளல் மலர்த்தாளின்
வீழ்வ தேய்க்கும் மறிகடலே. (7)

பள்ளி யரவிற் பேருலகம்
பசுங்கல் லாகப் பனிக்கற்றை
துள்ளு நறுமென் புனல்தெளிப்பத்
தூநீர்க் குழவி முறைசுற்றி
வெள்ளி வண்ண நுரைக்கலவை
வெதும்பும் அண்ணல் திருமேனிக்கு
அள்ளி அப்பத் திரைக்கரத்தால்
அரைப்ப தேய்க்கும் மணியாழி. (8)



## V. இனிய பகுதிகள்

### 1. நளன் கடற்கரையைச் சேர்தல்

இவை புகழேந்திப்புலவர் பாடிய நளவெண்பாச் செய்யுட் களினின்றுந் திரட்டப்பட்டன. இவர் செங்கற்பட்டு ஜில்லாவி லுள்ள பொன்விளைந்த களத்தூரில் வேளாளர் குலத்திலே பிறந்தவர்; வெண்பா இயற்றுவதில் வல்லவர்; 'வெண்பாவிற் புகழேந்தி' எனக் கொண்டாடப்பட்டவர். சிவன்; திருமால் ஆகிய இருவரையும் இவர் பாடி யிருத்தலின் இரு சமயத்தும் பற் றுடையவரெனத் தெரிகிறது. 'நாராய ணுய நமவென் றவனடி யிற் சேராதார் வெந்துயரஞ் சேர்ந்தாற்போல்,' என்னும் பாட்டு

திரு மந்திரத்தைக் கூறுதலின், பிறப்பால் வைணவர் என்றுங் கூறலாம். ஒட்டக்கூத்தருக்கும், இவருக்கும் சொற்போர் நிகழ்ந்த தாகக் கன்ன பரம்பரை உண்டு. இவரைப்போல் இனித்த நடையில் தெளிவாக வெண்பாப் பாடிய தமிழ்ப்புலவர் ஒருவருமிலர். பெருந்தேவனூர் வெண்பா என வழங்குவன இவர் வெண்பாக்களுக்கு முன்னிற்கமாட்டா என்பது படிப்பவருக்கு எளிதில் விளங்கும். ஒட்டக்கூத்தரை உண்பிக்கச் சென்ற அவர் மனைவிக்கு அவர், 'புகழேந்தியின் வெண்பாக்களைப் பிழிந்த இரசமேனும் நான் வேண்டேன்,' என்று கூறியதாக வழங்கும் செய்தி அப்புலவரின் வாக்கு நயத்துக்கு ஒரு காட்டாகும். இவர் ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன் இருந்தார் என்ப. இவர் வரலாற்றைப் புலவர் கதையின்கண் பரக்கக் காணலாம்.

"காதலியைக் காரிருளில் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ?—நாதம்
அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கலவ, ஓடி
ஒளிக்கின்ற தென்னோ? உரை. (1)

பானலே, சோலைப் பசுந்தென்றல் வந்துலவும்
கானலே, வேலைக் கழிக்குருகே,—யானுடைய
மின்னிமைக்கும் பூணுளவ் வீங்கிருள்வாய் ஆங்குணர்ந்தால்
என்னினைக்குஞ் சொல்வீர் எனக்கு. (2)

போவாய், வருவாய், புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்றும் என்போல ஆர்கலியே, மாதை
இரவகற்றி வந்தாய்கொல் இன்று." (3)

---

## 2. தமயந்தி தனிமை

பின் வரும் பாடல்கள் நைடதம் என்னும் நூலினின்றும் தேர்ந்தெடுக்கப்பட்டவை. இந்நூலாசிரியர் அதிவீரராமபாண்டியர் என்பவர். இவர் சற்றேறத்தாழ நானூறு ஆண்டுகட்கு முன் இருந்தவர். இவர் பாண்டி நாட்டின்கண் உள்ள தென்காசியிலிருந்து அரசு புரிந்தனரெனச் சிலரும், கொற்கை நகரிலிருந்து அரசாண்டதாக வேறு சிலரும் கூறுவர். இவருக்குத் தமிழ்வளர்த்த தென்னவன் என்று வழங்கும் சிறப்புப் பெயரால் இவரது தமிழ்ப்பற்று நன்கு துணியப்படும். கூர்மபுராணம், நறுந்தொகை முதலிய நூல்களும் இவரால் இயற்றப்பட்டன. கூர்ம புராணம் முதலியன இவரால் வடமொழியினின்று மொழி பெயர்த்துச செய்யப்பட்டமையான், இவர் செந்தமிழ்ப் புலமையே அன்றி, வடமொழிப் புலமையும் வாய்ந்தவர் என்பது தெளிவாகும். இவர், பிறர் பாடலில் பிழை காண்பாராயின் அவர் தலையில் குட்டும் வழக்கமுடையவர் என்பர். அதற்குக் 'குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியன் இங்கில்லை,' என்னும் அடியே ஆதாரமாகும். பிள்ளைப்பாண்டியன் என்பது இவருக்கு மறு பெயர். 'நைடதம் புலவர்க்கு ஔடதம்,' என்னும் புனைந்துரையால் இந்நூலின் அருமை செவ்வனம் விளங்கும். நைடதம் இவர் இயற்றிய நூல்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்தது. கற்பனை அலங்காரங்கள் அதன்கண் செறிந்து கிடக்கின்றன. இது வட மொழியினின்று மொழி பெயர்த்துச் செய்யப்பட்டது. இவர் வாக்கு மிகக் கம்பீரமானது. சிந்தாமணி, பெரியபுராணம், இராமாயணம் முதலிய நூற்களிலுள்ள சொற்களும், சொற்றொடர்களும், கருத்துக்களும், வருணனைகளும் இந்நூலிற் காணப்படுகின்றன. இந்நூலாசிரியர் சிவபத்தியில் சிறந்தவர் என்பதும், திருவாசகத்தை ஊன்றிப் படித்து இன்புறுபவர் என்பதும் இவர் பாடிய

கருவை அந்தாதிகளைப் படிப்பவருக்கு நன்கு விளங்கும். இவர் சமயம் சைவம் என்பதும் இவரது நூல்களால் வெளிப்படை. இங்கே எழுதப்பட்டிருக்கும் பாடல்கள் தமயந்தியின் காதற் பெருக்கையும், கள்ளங்கவடு கலவா உள்ளத் தூய்மையையும் காட்டுகின்றன; தேர்ந்த சொற்கட்டும், ஒழுகிசையும் பொருந்தி யுள்ளன.

"கான்றூர் உயிர்ஒழுகக் கண்ணீர் கவுள்அலைப்ப
ஊன்தோய் கணைபட் டுழலும் பிணையொத்தேன்;
மான்தேர் அரசர் முடிஉழுத வார்கழற்கால்
தோன்றால், என் கண்களிப்ப இன்னமும்என் தோன்றலையே.

நேரலார் போர்ஏறே, நிடதத்தார் கோமானே,
ஆரவரை மார்பா, அளியேன் உயிர்க்குயிரே,
காரிருள்வாய் யான்புலம்பக் கானகத்து விட்டகன்றும்
சாரலையால் இன்னும் இதுவோநின் தண்ணளியே! (5)

நெஞ்ச மெலிவேன் நினதுதடந் தோளும்,
கஞ்ச மலர்முகமுங் காணாது கண்பனிப்ப
மஞ்சுதவழ் வெற்பெறிந்த வச்சிரத்தோன் அன்றளித்த
விஞ்சை பயின்று விளையாட் டயருதியோ! (6)

ஞாலத் திருள்நடப்ப, நாட்கமலம் வாய்நெகிழ,
வேலைத் திரைமுகட்டில் வெய்யோன் எழுந்தனனால்;
மாலைக் கதிர்வடிவேல் மன்னர் பெருமானே,
காலைக் கடவ கடன்கழிக்க வாராயோ! (7)

மன்னவனே, இப்பிறப்பிற் கண்டு மணந்திலனேல்,
இன்னம் ஒருபிறப்பில் ஆனாலும் ஏழையேன்
தன்னந் தனியே இருந்துதவம் ஆற்றியும்நின்
பொன்அகலம் உள்ளுருகப் புல்லா தொழிவேனோ! (8)

வாவும் இளமான்காள், மயில்காள், மடப்பிடிகாள்,
கூவுங் கரிய குயில்காள், மென் புள்ளினங்காள்,
ஆவியென மேவி அகலேம் எனவகன்ற
காவலன்றான் போன வழிஎனக்குக் காட்டிரே.'' (9)

## 3. வறுமையின் கொடுமை

குசேலோபாக்கியானம், வல்லூர் தேவராயப்பிள்ளையால் இயற்றப்பட்டது. வல்லூர் தொண்டை நாட்டில் உள்ளது ; இவர் மரபால் கருணீகர். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களே இவருக்குத் தமிழ்ச் செவியறிவுறுத்திய ஆசிரியர். வாயுசங்கிதை, சூதசங்கிதை முதலியனவும் செய்தவர். இவர் இந்நூலைக் கருணீகக்குலப் பிரபுசிகாமணியாகிய சீநிவாசப் பிள்ளையின் வேண்டுகோளின்படி பாடினர் எனச் சிறப்புப்பாயிரங் கூறும். இவர் சமயம் சைவம். இந்நூல் 1850 ஆம் ஆண்டில் வெளியிடப் பட்டது. இப்புலவர் பாட்டுக்கள் வெள்ளையாய் இருத்தலின் சிறிது கல்வியுடையாரும் படித்து மகிழத் தக்கனவாகும். இவற்றுள் பல விடங்களில் சிறந்த கருத்துக்களும் தோன்றும். பாட்டுக்கள் மிக்க செழுமையுடையன வல்லவாயினும் விரும்பத்தக்க அளவில் சுவைகொடுப்பனவே. கண்ணபிரான் அவல் உண்ணலைக் குறித்த பகுதி சமத்காரத்தில் சிறந்தது. குசேலர் மக்களது பசி வருத்தம் கல்நெஞ்சையும் கரைக்கத் தக்கது. சுசீலையின் பொறுமையும், அவள் மக்களுக்குக் கூறும் தேறுதல் மொழிகளும் மிக அருமையானவை.

ஒருமகவுக் களித்திடும்போ தொருமகவு
 கைந்நீட்டும்; முந்திமேல் வீழ்ந்து
இருமகவுங் கைந்நீட்டும் ; மும்மகவுங்
 கைந்நீட்டும் ; என்செய் வாளால் !

பொருமியொரு மகவழும் ; கண்பிசைந் தழுமற்
றொருமகவு ; புரண்டு வீழாப்
பெருநிலத்திற் கிடந்தழும்மற் றொருமகவு ; எங்
ஙனஞ்சகிப்பாள் ? பெரிதும் பாவம் ! (10)

'அந்தோ, என் வயிற்றெழுந்த பசியடங்கிற்
றில்லை,' யென அழுமால் ஓர்சேய் ;
'சிந்தாத கஞ்சிவார்க் கிலையெனக்கு அன்
னாய்,' எனப் பொய் செப்பும் ஓர்சேய் ;
முந்தார்வத் தொருசேய் மிசையப் புகும்போ
தினில்ஒருசேய் முடுகி யீர்ப்ப
நந்தாமற் றற்சேயும் எதிர்ஈர்ப்பச்
சிந்துதற்கு நயக்கும் ஓர்சேய். (11)

இவ்வண்ணங் கலாய்விளைக்கும் மைந்தர்களை
நனிநோக்கி இரங்கி ஏங்கிச்
செவ்வண்ணக் கரதலத்தால் அணைத்தும், மடித்
தலத்திருத்திச் சிறப்புச் செய்தும்,
மைவண்ணக் கண்ணீரைத் துடைத்தும், முகம்
வெரிந் புறந் தைவந்தும், ஆம்பல்
அவ்வண்ண வாய்முத்தங் கொண்டும், நயத்
தோர்விதத்தில் ஆற்றல் செய்வாள். (12)

அடுத்தமனைச் சிறான் ஒருவன் 'இன்று நும
தகங்கறிஎன் அட்டார் ?' என்று
கொடுத்துவினா யினால், 'அச் சொற்பொருள் யாது ?
அதுதான் எச்சுவைத்து ? அன்னாய் நீ

எடுத்துரை,' என் றிடுமகவுக் குரைக்கில், ' அது
செய்யெனில், என் செய்வாம்!' என்று
' மடுத்தவஃ தறிந்திலே ' னெனமற்றொன்
றுரைத்ததனை மறக்கச் செய்வாள். (13)

வேறுமனைச் சிறுன் அயின்ற பக்கணங்கண்டு
ஓடிவந்து; விழிநீர் வாரச்
சீறுதலி லாதவனை முகம்பார்த்து, ' இன்
ஞன் இன்ன தின்றான் என்வாய்
ஊறுதலால் இப்பொழுதே செய்தளித்தி,'
எனஉடுத்த உடைதொட் டீர்க்குந்
தேறுதலில் சிறுமகவை எடுத்துமார்
பிடைஅணைத்துச் சிந்தை நோவாள். (14)

'குண்டலமோ திரங்கடகஞ் சுட்டிஅயல்
மனையார்தங் குழவிக் கிட்டார்;
புண்டரீகக் கண்அன்னாய், எனக்கு நீ
இடாதிருக்கும் பொறுமை என்னே !
கண்டெடுத்திப் போதிடு,' எனக் கரைமதலைக்
கில்லாதான் கடன்தந் தானுக்கு
எண்தபச்சொல் வார்த்தையென ' நாளைக்கு
நாளைக்'கென் றியம்பிச் சோர்வாள். (15)

---

## 4. பாண்டியன் இரங்கல்

முன்னரே குறிப்பிட்ட ஸ்ரீ பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற் புராணத்துள் மண் சுமந்த திருவிளையாடலில் வரும் இச்செய்யுட்கள் பாண்டியன், வந்தி ஆளாக வந்து தன் கைப்பிரம்பால் அடியம் பட்டவர் அலவாயின் அவிர்சடைக்

கடவுளே என்பதை உணர்ந்து, அப்பெருமானது அருள் விளையாட்டின் அருமையையும், மாணிக்கவாசகர் பெருமையையும், வந்தி என்னும் தவ மூதாட்டியின் கனிவையும், தனது சிறுமையையும் எண்ணி எண்ணி உருகிக் கூறியனவாம். இப்பாடல்களில் பக்திரசம் ததும்புகின்றது; இடம் உணர்ந்து படிப்பவர் கண்ணீர் கம்பலை யுடையவராவர் என்பது ஒருதலை.

"அடையாளம் பட ஒருவன்
அடித்தகொடுஞ் சிலைத்தழும்பும்,
தொடையாக ஒருதொண்டன்
தொடுத்தெறிந்த கல்லும்போல்
கடையானேன் வெகுண்டடித்த
கைப்பிரம்பும், உலகமெல்லாம்
உடையானே, பொறுத்ததோ
உன்னருமைத் திருமேனி! (16)

சுடியேறும் மலர்மகன்மால் முதலாய கடவுளரும்
படியேழும் அளவிறந்த பல்லுயிரும் நீயேயோ?
முடியேற மண்சுமந்தாய்; முதுகுதனி லடிபட்டது
அடியேனும் பட்டேன்; நின் திருமேனி ஆனேனோ! (17)

நின்னையுணர்ந் தவர்வேத நெறிவேள்வி செய்தூட்டும்
இன்னமுதிற் கழிசுவைத்தோ! இவளிடும்பிட் டெவ்வுயிர்க்கும்
மன்னவனே, செந்துவர்வாய் மலர்ந்தமுது செய்தனையால்
அன்னையிலா உனக்கிவளோர் அன்னையாய் வந்தாளோ! ()

அன்று சிறுத்தொண்டர் இடும் பிள்ளைக் கறியமுதும்,
மென்று சுவைதெரிந்த வேடனிட்ட வூனும்போல்
நன்று நரையாட்டி இடுபிட்டும் நயந்தருந்தி
என்றும் அடியார்க் கெளிவந்தாய் எந்தாயே!" (19)

## 5. கும்பகர்ணன் விபீடணன் உரையை மறுத்துரைத்தல்

பின்வரும் செய்யுட்கள் கம்பராமாயணம் கும்பகருணன் வதைப்படலத்தினின்றும் தெரிந்தெடுக்கப்பட்டவை. இவற்றுள் சகோதர வாஞ்சை மிக அழகாகவும், உருக்கமாகவும் நுட்ப வினைத்திறனோடு சொல்லப்பட்டுள்ளது. கும்பகருணன் பெருமையும் இவற்றால் விளங்கும். அவன் இராவணன் செய்த பிழைகளைக் கண்டு அவனைப் பன்முறை கண்டித்தும் உள்ளான்; எனினும், தன் தமையனை விட்டுப் பிரிவது அவன் தகைமைக்கு இயலாததாயிற்று; அதனால் அண்ணனுடன் ஒருங்கு பொருது மடிந்தான்; அன்றியும், அவன் நிலையற்ற வாழ்வை ஒரு பொருட்படுத்தாத உண்மை அறிவு வாய்க்கப் பெற்றவன் என்பதும் இப் பாடல்களால் புலனும்.

''நீர்க்கோல வாழ்வை நச்சி,
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலஞ் செய்து விட்டாற்
குயிர்கொடா தங்குப் போகேன்;
தார்க்கோல மேனி மைந்த,
என்துயர் தவிர்த்தி யாயின்
கார்க்கோல மேனியானைக்
கூடுதி கடிதின்'' என்றான். (20)

''கருத்திலா இறைவன் தீமை கருதினல், அதனைக் காத்துத்
திருத்தலா மாகின் அன்றோ திருத்துதல்; தீரா தாயின்,
பொருத்துறு பொருளுண் டாமோ? பொருதொழிற் குரிய ராகி
ஒருத்தரின் முன்னஞ் சாதல், உண்டவர்க் குரிய தம்மா.
தும்பியந் தொடையல் வீரன் சுடுகணை துரப்பச் சுற்றும்
வெம்புவெஞ் சேனை யோடும், வேறுள கிளைஞ ரோடும்

உம்பரும், பிறரும் போற்ற ஒருவன்மு வுலகை யாண்டு
தம்பிய ரின்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண்மேல்?'

அணையின்றி அயர்ந்த வென்றி
அஞ்சினார் நகைய தாகப்
பிணையொன்று கண்ணாள் பங்கன்
பெருங்கிரி நெருங்கப் பேர்த்த
பணையொன்று திரள்தோள், கால
பாசத்தாற் பிணிப்பக் கூசித்
துணையின்றிச் சேறல் நன்றோ
தோற்றுள கூற்றின் சூழல்? (23).

செம்பிட்டுச் செய்த இஞ்சித்
திருநகர்ச் செல்வந் தேறி,
வம்பிட்ட தெரியல் எம்முன்
னுயிர்கொண்ட பகையை வாழ்த்தி,
அம்பிட்டுத் துன்னங் கொண்ட
புண்ணுடை நெஞ்சோ டைய,
கும்பிட்டு வாழ்கி லேன்யான்;
கூற்றையும் ஆடல் கொண்டேன்.'' (24)

---

## 6. சந்திரமதி புலம்பல்

இப்பகுதி அரிச்சந்திர புராணத்தினின்றும் எடுக்கப்பட்டது. நல்லூர் வீரன் என்பவர் இதனைப் பாடியவர். இவர் ஆசுகவி செய்தலில் வல்லவராதலின், ஆசுகவிராயர் என வழங்கப்பட்டார். இவர் அவலச்சுவை பாடுவதில் தீர்ந்த கை. கச்சியப்ப சிவாசாரியரும் இவரும் நடையில் ஒப்பாவர். இவரது பாக்கள் இனிமையாகவும், வெண்மையாகவும், உருசியுள்ள

பாகைப் போலவும் உள்ளன. சந்திரமதி, பொய்கூறும்படி வற்புறுத்திய கௌசிக முனிவரை மறுத்துக் கூறுங்கால், 'இனி எமக்குளதென நினைக்கும் கதியிழக்கினும் கட்டுரை இழக்கிலேம்' எனக் கூறியதாக அமைத்ததும், அரிச்சந்திரன், 'வழிபடு தெய்வத்தை வணங்கிக் கிழக்கு நோக்கி யிரு,' என்று சந்திரமதிக்குக் கூறியபோது, அச்செல்வி, பழக்கமான அக்கணவனைப் பரவினுள்' என்றுரைத்ததும் இவர் ஒட்பத்தை விளக்கும். இதுபோல் வரும் நயங்கள் இவர் வாக்கில் பலப்பல. இப்புலம்பற் செய்யுட்களில் புலவர், சந்திரமதி கூற்றாக அரிச்சந்திரன் செங்கோன்மைச் சிறப்பையும், அன்பின் பெருக்கையும், வள்ளன்மையையும் தெளிவுறக் கூறும் வனப்பு மதிக்கத் தக்கது. உள்ளத்தை அனலிடைப்பட்ட மெழுக்கைப்போல உருக்கும் இவற்றை நெட்டுருச் செய்யாதார் இவவுலகில் நெட்டுருக்களே யாவர். இவர் சமயம் சைவம் என்பது இவர் பாடிய பாயிரத்தால் வெளிப்படையாம். இவர் காலம் ஏறக்குறைய நானூறு ஆண்டுகட்குமுன் ஆகும்.

"பனியால் நனைந்து, வெயிலால் உலர்ந்து
பசியால் அலைந்தும் உலவா
அனியாய வெங்கண் அரவால் இறந்த
அதிபாவம் என்கொல்? அறியேன்!
தனியே கிடந்து விடநோய் செறிந்து
தரைமீ துருண்ட மகனே,
இனியாரை நம்பி உயிர்வாழ்வம்? என்றன்
இறையோனும் யானும் அவமே. (25)

செங்கோல் அறத்தின் முறையே செலுத்து
திறலோன், எவர்க்கும் உரவோன்,
வெங்கோப யானை விறல்மன்னன், நம்மை
விடுவிக்க எண்ணி வருநாள்,

பங்கேருகத்து மலர்போல் விளங்கு
வதனு, மகிழ்ந்த பரிவால்
'எங்கேஎன் ஆசை மகன்?' என் றுரைக்கில்
எதிரேது சொல்வன்? மகனே ! (26)

நீராள வாவி செறிநா டனைத்தும்
நிறைமா தவற்கு தவினும்,
பாராளும் நீர்மை தொடர்பற்ற தன்று ;
படியாளும் எந்தை முடியில்
காராளர் ஏர்கள் கடவோசை ஒய்வில்
கன்னேசி நாட தனைமேல்
ஆராள வல்லர்? அவமே வனத்தில்
அரவால் இறந்த மகனே ! (27)

நல்லோர் வகுத்த முறையாம் அறங்கள்
நாலெட்டில் ஒன்று குறையேம் ;
இல்லோரை யற்பம் இகழோம் ; இறுக்கும்
இறையன்றி யேற உகவேம் ;
சொல்லோம் ; மறுத்து முரையோம் ; உரைத்த
துறவோர்கள் புத்தி கடவேம் ;
எல்லோர் தமக்கும் இனிதே விளைப்பம் ;
ஏதாக வந்த திதுவே ? (28)

மறைநீதி யுற்ற புறநா டழித்து
வருசேனை ஆள்வ தறியேம் ;
அறைநீதி முற்றும் உணரா அமைச்சை
அணிவாயில் வைத்து மறியேம் ;

குறையே இழைத்து வினையே விளைத்த
குடிவைத் திருந்து மறியேம்;
இறையே, தவத்தின் விளைவே, எமக்கும்
இதுவோ! விதித்த விதியே. (29)

கனமுந் தருக்கள் குலமுந தரித்த
கரமும் பெருத்த உரமும்
தினமுஞ் சிறக்கு முகமுந், தரித்த
சிகையுங், கிடக்கு முறைகண்டு
இனமும் தரித்த தயிரான பாவி
இறவாமல் என்றன் மகனே,
மனமுந் தரிப்ப தில ; நொந்து பெற்ற
வயிறுந் தரிப்ப திலையே! (30)

வடியேறு வெற்றி நெடுவேல் மலர்க்கை
மகனோ டிறந்து மடியாக்
கொடியேன் முகத்தில் விழியார், முனிக்கு
வளநா டளித்த கொடையார் ;
இடியே றடர்த்த மரமாகி மண்ணின்
இடையே யுழத்தல் அழகோ?
அடியேனை யொக்க முடியா திருத்தல்
அநியாய மிக்க யமனே!" (31)

———

## 7. கண்ணபிரான் அவல் உண்ணல்

(குசேலோ பாக்கியானம் - வல்லூர் தேவராயப் பிள்ளை)

' செறிதரு சுவைத்தி தென்றுந் தேவர்க்கு மரிய தாகும்;
அறிதரு விருப்பின் இல்லின் அமைத்ததே; பழைது மன்று;
குறிதரு விலைப்பாற் சென்று கோடல் இவ்வளத்ததோ?'' என்று
உறியிளை வாரியுண்டோன் ஒருபிடி அவல்தின் றனே ! (32)

முன்னுமிவ் அவலொன் றேனும் முனைமுறிந் ததுவுமின்று;
பன்னுமுட் டையுமின் றகும்; பட்டஅங் கையும் மணக்கும்,
கொன்னும்வாய் செறிப்பின் அம்ம! குளமும்வேண் டுவதின்று'
என்று
உன்னுபல் லுலகும் உண்டோன் ஒருபிடி அவல்தின் றனே ! ()

'நாட்டுமிவ் வவல்வி ருப்பம் நமக்குமிக் குள்ள தென்று
கேட்டுளாய் கொல்லோ? முன்னும் கிளர்ந்திருப் பதுமன்றே'
யென்று
எட்டுமென் மலர்ப்பூந்தொங்கல் இமையவர்க்கமிர்தம் முன்னாள்
ஊட்டிய புகழின் மேலோன் ஒருபிடி யவல்தின் றனே ! ()

அரியவன் பினிற்கொடுத்தல் இழிந்ததா யினுஞ்சி றந்தது ;
இரியுமன் பினிற்கொ டுத்தல் இழிந்ததே சிறந்த தேனும் ;
பெரியவர் புகழப் பட்ட பெருந்தவக் குசேல மேலோன்
உரியஅன் பினையுங் கூட்டி யொருபிடி யவல்தின் றனே.



# VI. பண்ணெறி

## 1. சித்து

கீழ்வரும் செய்யுட்கள் அருணைக்கலம்பகத்தினின்று தேர்ந்தெடுக்கப்பட்டன. இவற்றை ஆக்கியோர் தீவ்வியகவி சைவ எல்லப்ப நாவலர் என்பார். இவரூர் சோணாட்டிலுள்ள திருவெண்காட்டுக்கு அருகிலுள்ள இராதாநல்லூர் என்பர். இவர்

குலம் வேளாளகுலம்; சமயம் சைவம்; இவர் தருமபுர ஆதீனத்தைச் சார்ந்து பல கலைகளையுங் கற்றார். சௌந்தரியலகரிக்கு இயற்றிய உரையினால் இவரது பெரும்புலமை விளங்கும். சேவந்திப்புராணம், திருவெண்காட்டுப் புராணம் முதலிய சில புராணங்களும் இவரால் இயற்றப்பட்டன. திருவருணைக் கலம்பகம் தீஞ்சுவைப்பொக்கிஷமாய் உள்ளது. இவர் வாக்கில் இருமொழிச்சிலேடை, முப்பொருட் சிலேடை முதலிய அணிகளும், கற்பனைகளும் நிறைந்திருக்கின்றன. நாவலர் காலம் ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகட்கு முன் என்ப.

வீரத்தை அணிமழுவார் உமைபங் காளா
விளங்கருணை சித்தாயாம் விளம்பக் கேளாய்
காரத்தை எமக்கிடுகள சத்தை யேகோ
கனகமெனக் காட்டிடுவோம், கரியோ ருக்குத்
தாரத்தைப் பொன்னாக அமைத்தோம தம்பி
தாம்பரமும் பொன்னாகச் சமைத்தோம, இந்தப்
பாரத்தை யார் அறிவார்? அயனு கத்தைப்
பசும்பொனிற மாகவுமே பாலித்தோமே! (1)

## 2. சொற்சாதுரியம்

அள்ளற் கடல்விடம் நீங்காத கண்டர் அருணைவெற்பிற்
பிள்ளைப் பிறையுஞ் சிலையுமொப் பாம்நுதற் பேதைநல்லாள்
வள்ளைக் குழைபொரு கண்ணுக்குத் தோற்றம்பும் வாரிதியுங்
கள்ளக் கயலும் இராசியின் மீனுங் கடைப்பட்டதே. (2)

## 3. அம்மானை

நாரா யணன்அறியா நாதர்அரு ணைசருக்கு
வாரார் இலைகலைமெய் மாதங்கம் அம்மானை ;

வாரார் சிலைகலைமெய் மாதங்கம் ஆமாயின்
ஆராயுங் கால்எடுப்ப தையமன்றோ? அம்மானை;
அன்னம்அறி யார்எடுப்ப தையமோ? அம்மானை. (3)

## 4. மறம்

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என வழங்கும் மணவாள தாசர் சோழமண்டலத்துள்ள திருமங்கையூரில், பார்ப்பனக் குலத்தில் ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பிறந்தவர். இவர் சமயம் வைணவம்; விஷ்ணுபக்தியிலும், ஆழ்வார் பக்தியிலும் மிக்கவர்; இலக்கியம், இலக்கணம், சாத்திரம் முதலிய எல்லா நூல்களையும் நன்கு கற்றவர். சொல்லும் பொருளுந் தொடையும் நடையுஞ் சுவைபெற அமைத்துக் கவிபாடுந் திறலுடையவர். சொற்கள் [illegible]ரிற் பிரிந்து பொருள்படுமாறு திருக்கு, மடக்கு, சிலேடைகள் பாடும் ஆற்றலில் மிக்கவர். இவரும் எல்லப்ப நாவலரும் ஒரே காலத்தினரெனக் கன்ன பரம்பரை வழங்கும். திருவரங்க யமகவந்தாதி, திருவேங்கட மாலை முதலிய பல பிரபந்தங்களையுஞ் செய்தவர். இவர் திருவரங்கத்தையே தமக்கு உறையுளாகக் கொண்டு வாழ்ந்தனர். இவரது ஆழ்வார் பத்தியினை,

'பாதியாய் அழுகியகால் கைய ரேனும்,
பழிதொழிலும் இழிகுலமும் படைத்தா ரேனும்,
ஆதியாய், அரவணையாய், என்ப ராகில்
அவரன்றோ யாம்வணங்கும் அடிக ளாவார்'

என்பதனால் அறிக.

இவருக்குத் 'திவ்விய கவி' என்ற புனைப்பெயரும் உண்டு. இவர் இயற்றிய நூல்கள் 'அஷ்டப்பிரபந்தம்' எனச் சிறப்பித்து வழங்கப்படும். 'அஷ்டப்பிரபந்தங் கற்றவன் அரைப் புலவன்,' எனப் பழமொழியும் வழங்கும். தமிழ் கேட்போர் புலர் இவர் நூல்களில் முன்னர்ப் பயிலுவர்.

"கொற்றவன்தன் திருமுகத்தைக் கொணர்ந்த தூதா,
குறையுடனுக் கோமறவர் கொம்பைக் கேட்டாய்?
அற்றவர்சேர் திருவரங்கப் பெருமாள் தோழர்
அவதரித்த திருக்குலமென் றறியாய் போலும்?
மற்றதுதான் திருமுகமே ஆனால் அந்த
வாய்செவிகண் மூக்கெங்கே? மன்னர் மன்னன்
பெற்றஇள அரசானால் ஆவின் கொம்பைப்
பிறந்தகுலத் துக்கேற்கப் பேசு வாயே." (4)

வேறு

"பேசவந்த தூத, செல் லரித்த ஓலை செல்லுமோ?
பெருவ ரங்கள் அருள்அ ரங்கா பின்னை கேள்வர் தாளிலே
பாசம்வைத்த மறவர் பெண்ணை நேசம் வைத்து முன்னமே
பட்ட மன்னர் பட்ட தெங்கள் பதிபு குந்து பாரடா!
வாசலுக்கி டும்ப டல்க வித்து வந்த கவிகைமா
மகுட கோடி தினைஅ ளக்க வைத்த காலும் நாழியும்
வீசுசாம ரங்கு டில்தொ டுத்த கற்றை சுற்றிலும்
வேலியிட்ட தவர்க ளிட்ட வில்லும் வாளும் வேலுமே.



## VII. தனிப்பாடல்கள்

### 1. காளமேகப்புலவர்

காளமேகப் புலவர், 'வசைபாடக் காளமேகம்' எனச் சிறப்பிக்கப்பட்டவர். ஆசுகவியாய்ப் பல சித்திர மமைந்த பாடல்களைப் பாட வல்லவர். ஒருவர் கொடுத்த சமுத்திகளை வைத்து உடனே கவி பாடும் வன்மை மிகுதியும் உடையர். இவர் விரைந்து பாடுந் தன்மை, 'இம்மென்னும் முன்னே எழுநூறும்

எண்ணூறும், அம்மென்றால் ஆயிரம் பாட்டாகாதா', என இவரே கூறுமாற்றான் தெளியப்படும். இவர் சிலேடைக் கவிகள் செய்தலிலும் சமர்த்தர்; பிறர்மீது வசை பாடுவதிலும், கடவுளர் மீது நிந்தாஸ்துதி பாடுவதிலும் நிபுணர்; இவர் கும்பகோணத் தருகிலுள்ள நாதன் கோயில் எனப்படும் நந்திபுரத்தின்கண் வேதியர் குலத்தில் இன்றைக்கு நானூற்று ஐம்பது ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றியவர். இவர் இயற்பெயர் வரதர் என்பது. இவர் சமயம் சைவம்; முன் வைணவராயிருந்து பின் சைவராயினர் என்பர். திருவானைக்காஉலா, சித்திரமடல், பரப்பிரம விளக்கம் என்னும் பிரபந்தங்களைச் செய்தவர். இவர் பாடிய தனி நிலைச் செய்யுட்கள் நகைச் சுவை மலிந்தன; எவரையும் மகிழ்விக்குந் தகுதி வாய்ந்தன.

ஈயேற உலகமே துலுங்கும்

வாரணங்கள் எட்டும், மகமேரு வுங்கிரியும்,
தாரணியும் நின்று சலித்தனவால்—நாரணனைப்
பண்வாய் இடைச்சி பருமத்தி னாலடித்த
புண்வாயில் ஈமொய்த்த போது. (1)

சிலேடை

ஆமணக்குக்கும் யானைக்கும்

முத்திருக்கும்; கொம்பசைக்கும்; மூரித்தண் டேந்திவரும்
கொத்திருக்கும் ; நேரே குலைசாய்க்கும்,—எத்திசைக்குந்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்கும் மால்யானை யாம். (2)

பாம்புக்கும் எள்ளுக்கும்

ஆடிக் குடத்தடையும், ஆடும்போ தேஇரையும் ;
மூடித் திறக்கின் முகங்காட்டும் ;—ஓடிமண்டை

பற்றிற் பரபரெனும்; பாரிற்பிண் ணாக்குமுண்டாம்;
உற்றிடுபாம் பெள்ளெனவே ஓது. (3)

பாம்புக்கும் எலுமிச்சம்பழத்துக்கும்

பெரியவிட மேசேரும்; பித்தர்முடி ஏறும்;
அரியுண்ணும்; உப்புமேல் ஆடும்;—எரிகுணமாம்;
தேம்பொழியுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்புமெலு மிச்சம் பழம். (4)

கம்பமத கடகளிற்றான் தில்லை வாழுங்
கணபதிதன் பெருவயிற்றைக் கண்டு வாடி,
உம்பரெலாம விழித்திருந்தார்; அயில்வேல் செங்கை
உடையஅறு முகவனுங்கண் ணீரா றானான்;
பம்புசுடர்க் கண்ணனுமோ நஞ்சுண் டான்: மால்
பயமடைந்தான்; உமையும்உடல் பாதி யானாள்;
அம்புவியைப் படைத்திடுவ தவமே யென்று
அயனும் அன்னம் இறங்காமல் அலைகின் றானே. (5)

---

## 2. இராமச்சந்திர கவிராயர்

இவர் தொண்டை மண்டலத்துள்ள இராசநல்லூரிற் பிறந்தவர்; இவர் வதிந்த இடம் சென்னை மாநகரம்; குலம் ராயகுலம்; சமயம் சைவம்; காலம் இற்றைக்கு அறுபது ஆண்டுகட்கு முன் என்பர். இவர் நாடகத்தமிழில் நற்புலம் பெற்றுச் சகுந்தலை விலாசம், பாரதவிலாசம் முதலிய பல நூல்களை இயற்றினர்; நடுவெழுத்தலங்காரம், நவபங்கி முதலிய சித்திரக் கவிகளும் பாடியுள்ளார். இவர் சமயத்துக் கேற்றபடி சாதுரியமாய்ப் பாடுதலில் வல்லவர். இவர் பாடிய தனிப்பாடல்களில் சில இங்குத் தரப்பட்டுள்ளன.

ஆவீன, மழைபொழிய, இல்லம் வீழ
அகத்தடியாள் மெய்நோவ, அடிமை சாவ,
மாவீரம் போகுதென்று விதைகொண் டோட,
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொண்டொருவர் எதிரே செல்லத்
தள்ளொணுா விருந்துவரச் சர்ப்பந் தீண்டக்
கோவேந்தர் உழுதுண்ட கடமை கேட்கக்
குருக்களோ தக்கணைகள் கொடுவென் றாரே. (8)

வஞ்சகர்பால் நடந்தலைந்த காலிற் புண்ணும்,
வாசல்தொறும் முட்டுண்ட தலையிற் புண்ணும்,
செஞ்சொல்லை நினைந்துருகும் நெஞ்சிற் புண்ணும்,
தீருமென்றே சங்கரன்பாற் சேர்ந்தேன். 'அப்பா,
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும், வேடன்
கொடுங்காலால் உதைத்த புண்ணும், கோப மாகப்
பஞ்சவரில் ஒருவன் வில்லால் அடித்த புண்ணும்,
பார்', என்றே காட்டிநின்றான் பரமன் தானே. (9)

---

## 3. படிக்காசுப் புலவர்

இவர் தொண்டை நாட்டில் உள்ள களத்தூரில் செங்குந்தர் குலத்தில் உதித்தவர்; சைவ சமயத்தினர். இப்பெயர் படிக்காசு பெற்றதனால் வழங்கிய காரணப் பெயர் என்பர். இவர் சேதுசமஸ்தான வித்துவானாய் இருந்தவர்; சந்தக் கவி பாடுதலிற் சமர்த்தர்; 'பண்பாய பகர்சந்தம் படிக்காசலால் ஒருவர் பகரொணாதே', எனும் புகழுரையும் பெற்றவர்; காலம் தளவாய் இரகுநாத சேதுபதி காலம். தொண்டை மண்டல சதகம், வேளூர்க் கலம்பகம் முதலியன இவரால் பாடப்பட்டன. இவை அவ்வவ் வமயங்களில் பாடிய தனிப்பாடல்கள் மிகவும் இனிமை

யுடையன. இவர் வரலாற்றைப் புலவர் கதை விரித்துரைக்கும்.

இரகுநாத சேதுபதிமேல் பாடியது

மூவேந்த ரும்அற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்றொடெட்டுக்
கோவேந்த ரும்அற்று மற்றொரு வேந்தன் கொடையும் அற்றுப்
பாவேந்தர் காற்றில் இலவம்பஞ்சாகப் பறக்கையிலே
தேவேந்த்ர தாருஒத் தாய்ரகு நாத சயதுங்கனே. (10)

சீதக்காதிப்பிரபு இறந்தபோது பாடியன.

பூமா திருந்தென்? புவிமா திருந்தென்ன? பூதலத்தில்
நாமா திருந்தென்ன? நாமிருந் தென்ன? நன் நாவலர்க்குக்
கோமான் அழகமர்மால் சீதக் காதி கொடைமிருந்த
சீமான் இறந்திட்ட போதே புலமையுஞ் செத்ததுவே. ()

தேட்டாளன் காயல் துரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்பம் நாட்டிவைத் தான் தமிழ் நாவலரை
ஓட்டாண்டி யாக்கி அவர்கள்தம் வாயில் ஒருபிடிமண்
போட்டான் அவனும் ஒளித்தான் சமாதிக்குழிபுகுந்தே.

மறந்தாகிலும் அரைக் காசுங் கொடாமட மாந்தர் மண்மேல்
இறந்தாவ தென்ன இருந்தாவ தென்ன இறந்து விண்போய்ச
சிறந்தாளுங் காயல் துரைசீதத் காதி திரும்பிவந்து
பிறந்தால் ஒழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே.()

காளத்தி பூபதிமேல் பாடியது

பெற்றாள் ஒருபிள்ளை என்மனை யாட்டி ; அப்பிள்ளைக் குப்பால்
பற்றாது ; கஞ்சி குடிக்குந் தரமல்ல ! பாலிரக்கச்
சிற்றாளும் இல்லை ; இவ்வெல்லா வருத்தமுந் தீரவொரு
கற்றா தரவல்லை போவல்லை மாநர்க் காளத்தியே. (14)

## 4. சீட்டுக்கவி

தீட்டுக்கவி என்பது சீட்டுக்கவி என மருவி வழங்கும். தீட்டுக்கவி எழுதப்படுங் கவி. பண்டைக் காலத்திலே புலவர் திருமுகமும் பாட்டிலேயே எழுதுதல் வழக்கம். சீட்டுக்கவியில் தமது புலமையைக் குறித்துந் தம்மைக் குறித்தும் புகழ்ந்து எழுதுவர். அங்ஙனம் அவர் எழுதுதலை இலக்கண நூலாரும் ஒப்புக்கொண்டுள்ளார். சீட்டுக்கவி செய்தலில் அந்தகக் கவி வீரராகவ முதலியார் மிகவும் வன்மை வாய்ந்தவர்.

வீரராகவ முதலியார் செங்கற்பட்டு ஜில்லாவிலே யுள்ள பூதூர் என்னும் ஊரிலே வடுகநாத முதலியார் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினவர். இவர் பிறவிக் குருடராக விருந்தும் தமிழிலே பெரும்புலமை பெற்று எல்லாராலும் புகழப்பட்டுச் சிறந்து வாழ்ந்தார். இவர் கவிகள் சொல் நயம், பொருள் நயம் செறிந்து இனிமை பயக்கும். இவரியற்றிய நூல்கள் கழுக்குன்றத்து மாலை, சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ், ஆருலா முதலியன. இவர் சைவ சமயத்தினர். இவர் வரலாற்றைப் புலவர் கதையின்கண் பரக்கக் காணலாகும். இவர் இற்றைக்கு இருநூற்றைம்பது ஆண்டுகட்குமுன் விளங்கியவர்.

ஏடாயிரங் கோடி எழுதாது தன்மனத்
　　தெழுதிப் படித்த விரகன்,
இமசேது பரியந்தம் எதிரிலாக் கவிவீர
　　ராகவன் விடுக்கு மோலை
சேடாதிபன் சிரமசைத் திடும் புகழ்பெற்ற
　　திரிபதகை குலசேகரன்
தென்பாலை சேலம் புரந்துதா கந்தீர்த்த
　　செழியன் எதிர் கொண்டு காண்க ;

பாடாத கந்தருவம், எறியாத கந்துகம்,
பற்றிக் கொலாத கோணம்,
பறவாத கொக்கு, அனற்பண்ணுத கோடை, ஐம்
படையில் தொடாத குந்தம்,
சூடாத பாடலம், பூவாத மாவொடு
தொடுத்து முடியாத சடிலம்,
சொன்னசொற் சொல்லாத கிள்ளை யொன்றெங்குந்
துதிக்கவர விடல் வேண்டுமே. (15)

---

## 5. ஆற்றுப்படை

இது சம்பார் பாடியது. ஆற்றுப்படை-வழிபடுத்தல்; ஆறை நகர் வாண பூபதியைப் பாடிப் பரிசில் பெற்று மீண்ட புலவன் வழியில் வரும் பாணனைக் கண்டு அவனை ஆற்றுப்படுத்தியது.

தேருளைப் புரவி வாரணத் தொகுதி
திறைகொணர்ந்து வருமன்ன, நின்
தேயமே துனது நாமமேது? புகல்
செங்கையாழ் தடவுபாண, கேள் :
வாரு மொத்தகுடி நீரும் நாமுமக
தேவன் ஆறைநகர் காவலன்
வாண பூபதி மகிழ்ந்தளித்த வெகு
வரிசை பெற்றுவரு புலவன்யான்
நீரும் இப்பரிசு பெற்று மீள
வரலாகும் ஏகும்; அவன் முன்றில்வாய்
நித்திலச் சிகர மாடமாளிகை
நெருங்கு கோபுர மருங்கெலாம்
ஆரு நிற்கும்; உயர்வேம்பு நிற்கும்; வளர்
பனையும் நிற்கும்; அதன் அருகிலே
அரசு நிற்கும்; அரசைச் சுமந்த சில
அத்தி நிற்கும் அடையாளமே. (16)

# VIII. காதை

## 1. திருத்தொண்டர் புராணம்

### குங்குலியக் கலய நாயனார் புராணம்

பெரிய புராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணம் சேக்கிழார் சுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டது. சேக்கிழார் இப்போது செங்கற்பட்டு ஜில்லாவிலே சைதா பேட்டைத் தாலூகாவில் உள்ள குன்றத்தூரில் வேளாளர் குலத்தில் சேக்கிழார் மரபில் அவதரித்தவர். சேக்கிழார் மரபினை விளக்கிய காரணத்தால் சேக்கிழார் எனப்பட்டார். இவர் இயற்பெயர் அருண்மொழித் தேவர் என்பது. இவர் சிவபத்தியும், சொல் வன்மையும், நுண்ணறிவும் உடையவர். இவர் முதலாவது குலோத்துங்கச் சோழனுக்கு (கி. பி. 1070-1118) மந்திரியாக இருந்து அவன் வேண்டுகோளின்படி பெரிய புராணம் பாடினார். பெரிய புராணம் சைவத் திருமுறைகளுள் பன்னிரண்டாவதாகும். இதில் அறுபத்துமூன்று நாயன்மார் வரலாறு அழகொழுக வினைத்திறனுடன் சொல்லப்பட்டுளது. சேக்கிழாரது செந்தமிழ்ப் புலமையும், அருட்கவித்திறனும் பெரிதும் போற்றற்பாலன. இவருடைய நடை எங்கும் ஒரே ஒழுங்காய் வீக்கந் தூக்க மில்லாமல் பெருமிதத்துடன் ஒளிர்கின்றது. இவரை மஹா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், 'பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ' என்றும் 'ஒழியாப் பத்திக்கடல்' என்றும், 'வலஞ்சார் பெருநாவலர் ஏறு', என்றும் புகழ்ந்துரைப்பர். சுருங்கச் சொல்லில் பேராற்றல் வாய்ந்தவர். நாயன்மாரையும், அவர் தம் மனைவிமாரையும் எங்கும் பலர்பாலிலேயே தவறாது கூறும் நாகலம், பெரு மகிழ்ச்சி தருவது. உவமை, உருவகம் முதலிய அணிகளைத் தத்துவம்,

பொருள் தோன்ற அமைத்துப் பாடுவர். நாடு நகரச் சிறப்புக் களை வகைப் படுத்தித் தமிழில் முதன் முதற் பாடியவர் இவரே. இவ்வமைப்பையே பின்பற்றிச் சிவஞான முனிவரும் காஞ்சிப் புராணத்து நாடு நகரங்களைப் பாடினர்.

அவ்வுண்மையினை, 'திருத்தொண்டை நன்னாட்டின் நானி லத் தைந்திணை வளத்தைத் தெரித்துக் காட்ட, மருத்தொண் டை வாய்ச்சியர்சூழ் குன்றை நகர்க் குலக்கவியே வல்லான்', என்றுகூறி யிருத்தலால் உணர்க. இவர் காலம் பதினொன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். கீழ்வரும் குங்குலியக்கலய நாயனார் புராணம் பல நயங்கள் பொருந்திச் சொன்னோக்கும் பொருணோக்கும் பெற்றுத் திகழ்கின்றது. கதை கருதிய பல வனப்புக்களையும் ஒவ்வொரு செய்யுளைப் பற்றியும் எழுதப்படும் குறிப்புரையின் கண் கண்டின்புறுக.

வாய்ந்தநீர் வளத்தால் ஓங்கி மன்னிய பொன்னி நாட்டில்
ஏய்ந்தசீர் மறையோர் வாழும் எயிற்பதி, எறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் சடையார் பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி யிருப்பது கடவூ ராகும்.

மருவிய திருவின் மிக்க வளம்பதி அதனில் வாழ்வார்;
அருமறை முந்நூன் மார்பின் அந்தணர் கலயர் என்பார்;
பெருநதி அணியும் வேணிப் பிரான்கழல் பேணி நாளும்
உருகிய அன்பு கூர்ந்த சிந்தையார்; ஒழுக்கம் மிக்கார்.

கங்கைநீர் கலிக்குஞ் சென்னிக் கண்ணுதல் எம்பி ராற்குப்
பொங்குகுங் குலியத் தூபம் பொலிவுறப் போற்றிச்செல்ல
அங்கவர் அருளினாலே வறுமைவந் தடைந்த பின்னுந்
தங்கணா யகர்க்குத் தாமுன் செய்பணி தவாமை உய்த்தார்.

இந்நெறி ஒழுகும் நாளில் இலம்பாடு நீடு செல்ல,
நன்னிலம் முற்றும் விற்றும் நாடிய அடிமை விற்றும்
பன்னெடுந் தனங்கள் மாளப், பயில்மனை வாழ்க்கைதன்னின்
மன்னிய சுற்றத் தோடு மக்களும் வருந்தி னார்கள்.

யாதொன்று மில்லை யாகி யிருபகல் உணவும் மாறிப்
பேதுறு மைந்த ரோடு பெருகுசுற் றத்தை நோக்கிக்
காதல்செய் மனைவி யார்தங் கணவனார் கலய னார்கைக்
கோதில்மங் கலநாற் றாலி கொடுத்து நெற் கொள்ளும்என்றார்.

அப்பொழு ததனைக் கொண்டு நெற்கொள்வான் அவரும்போக
ஒப்பில்குங் குலியங் கொண்டோர் வணிகனும் எதிர்வந் துற்றான்
இப்பொதி என்கொல்? என்றார் உள்ளவா றியம்பக் கேட்டு,
முப்புரி முந்நூன் மார்பர் முகமலர்ந் திதனைச் சொன்னார்.

ஆறுசெஞ் சடைமேல் வைத்த அங்கணர் பூசைக் கான
நாறுகுங் குலியம் ஈதேல், நானின்று பெற்றேன் நல்ல
பேறுமற் றிதன்மே லுண்டோ? பெறாப்பேறு பெற்று வைத்து
வேறினிக் கொள்வதென்' னென் றுரைத்தெழும் விருப்பின்
மிக்கார்.

'பொன்தரத் தாரும்' என்று புகன்றிட வணிகன் தானும்
என்றர இசைந்த தென்னத் தாலியைக் கலயர் ஈந்தார்.
அன்றவன் அதனை வாங்கி, அப்பொதி கொடுப்பக்கொண்டு
நின்றிலர் விரைந்து சென்றார் நிறைந்தெழு களிப்பினோடும்.

அன்பரங் கிருப்ப நம்பர் அருளினால் அளகை வேந்தன்
தன்பெரு நிதியந் தூர்த்துத் தரணிமேல் நெருங்கவெங்கும்
பொன்பயில் குவையும் நெல்லும் பொருவில்பல் வளனும்பொங்க
மன்பெருஞ் செல்வ மாக்கி வைத்தனன் மனையில் நீட.

மற்றவர் மனைவியாரும், மக்களும் பசியால் வாடி,
அற்றைநாள் இரவு தன்னில் அயர்வுறத் துயிலும் போதில்
நற்றவக் கொடிய னார்க்குக் கனவிடை நாதன் நல்கத்
தெற்றென வுணர்ந்து செல்வங் கண்டபின் சிந்தை செய்வார்.

கொம்பனார் இல்ல மெங்கும் குறைவிலா நிறைவிற் காணும்
அம்பொனின் குவையும் நெல்லும் அரிசியு முதலா யுள்ள
எம்பிரான் அருளாம் என்றே யிருகரங் குவித்துப் போற்றித்
தம்பெருங் கணவ னார்க்குத் திருவமு தமைக்கச் சார்ந்தார்.

காலனைக் காய்ந்த செய்ய காலனார் கலய னாராம்
ஆலும் அன்புடைய சிந்தை அடியவர் அறியும் ஆற்றால்
சாலநீ பசித்தாய்; உன்றன் தடநெடு மனையில் நண்ணிப்
பாலின் இன் அடிசில் உண்டு பருவரல் ஒழிக என்றார்.

கலையனார் அதனைக் கேளாக் கைதொழு திறைஞ்சிக் கங்கை
அலைபுனற் சென்னி யார்தம் அருண்மறுத் திருக்க அஞ்சித்
தலைமிசைப் பணிமேற் கொண்டு சங்கரன் கோயி னின்று
மலைநிகர் மாடவீதி மருங்குதம் மனையைச் சார்ந்தார்.

இல்லத்திற் சென்று புக்கார் இருநிதிக் குவைக ளார்ந்த
செல்வத்தைக் கண்டு நின்று திருமனை யாரை நோக்கி,
'வில்லொத்த நுதலாய், இந்த விளைவெலாம என்கொல்' என்ன,
'அல்லொத்த கண்டன் எம்மான் அருடர வந்த' தென்றார்.

மின்னிடை மடவார் கூற மிக்க சீர்க் கலய னார்தாம்
மன்னிய பெருஞ்செல் வத்து வளமலி சிறப்பை நோக்கி
என்னையு மாளுந் தன்மைத் தெந்தையெம் பெருமான் ஈசன்
தன்னருள் இருந்த வண்ணம் என்றுகைதலைமேற் கொண்டார்.

பதுமநற் றிருவின் மிக்கார் பரிகலந் திருத்திக் கொண்டு
கதுமெனக் கணவனாரைக் கண்ணுதற் கன்பரோடும்
விதிமுறை தீப மேந்தி மேவுமின் அடிசில் ஊட்ட
அதுநுகர்ந் தின்பம் ஆர்ந்தார் அருமறைக் கலயனார்தாம்.

ஊர்தொறும் பலிகொண் டுய்க்கும் ஒருவன தருளி னாலே
பாரினில் ஆர்ந்த செல்வ முடையராம் பண்பின் நீடிச்
சீருடை அடிசில் நல்ல செழுங்கறி தயிர்நெய் பாலால்
ஆர்தரு காதல் கூர அடியவர்க் குதவும் நாளில். (22)

செங்கண்வெள் ளேற்றின் பாகன் திருப்பனந் தாளின் மேவும்
அங்கணன் செம்மை கண்டு கும்பிட அரசன் ஆர்வம்
பொங்கித்தன் வேழ மெல்லாம் பூட்டவும் நேர்நில் லாமைக்
கங்குலும் பகலுந் தீராக் கவலையுற் றழுங்கிச் செல்ல.

மன்னவன் வருத்தங் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலய னார்தாம் நாதனை நேரே காணும்
அந்நெறி தலைநின் றானென் றரசனை விரும்பித் தாமும்
பின்னெறித் தலைய வேணி விகிர்தனை வணங்க வந்தார்.

மழுவுடைச் செய்ய கையர் கோயில்கள் மருங்கு சென்று
தொழுதுபோந் தன்பி னோடுந் தொன்மறை நெறிவ ழாமை
முழுதுல கினையும் போற்ற, மூன்றெரி புரப்போர் வாழுஞ்
செழுமலர்ச் சோலை வேலித் திருப்பனந் தாளிற் சேர்ந்தார்

காதலால் அரசன் உற்ற வருத்தமுங் களிற்றி னோடு,
தீதில்வான் சேனை செய்யுந் திருப்பணி நேர்ப டாமை
மேதினி மிசையே யெய்த்து வீழ்ந்திளைப் பதுவும் நோக்கி
மாதவக் கலயர் தாமும் மனத்தினில் வருத்த மெய்தி.

சேனையும் ஆனை பூண்ட திரளும்எய்த் தெழாமை நோக்கி
"யானும்இவ் வினைப்புற் றெய்க்கும் இதுபெற வேண்டு' மென்று
தேனலர் கொன்றை யார்தந் திருமேனிப் பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறு பூண்டு கழுத்தினால் வருந்த லுற்றார்.

நண்ணிய ஒருமை அன்பின் நாருறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பி நிற்க
ஒண்ணுமோ? கலய னார்தம் ஒருப்பாடு கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றார்; அமரரும் விசும்பில் ஆர்த்தார்.

பார்மிசை நெருங்க வெங்கும் பரப்பினர் பயில்பூ மாரி
தேர்மலி தானை மன்னன் சேனையுங் களிறும் எல்லாங்
கார்பெறு கானம் போலக் களித்தன; கைகள் கூப்பி
வார்கழல் வேந்தன், தொண்டர் மலரடி தலைமேல் வைத்து;

'விண்பயில் புரங்கள் வேவ, வைதிகத் தேரின் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர்;
மண்பகிர்ந் தவனுங் காணா மலரடி இரண்டும் யாரே
பண்புடை அடியார் அல்லாற் பரிந்துநேர் காண வல்லார்?"

என்றுமெய்த் தொண்டர் தம்மை யேத்தி, யங் கெம்பிரானுக்கு
ஒன்றிய பணிகள் மற்றும் உள்ளன பலவுஞ் செய்து
நின்றவெண் கவிகை மன்னன் நீங்கவும், நிகரில் அன்பர்
மன்றிடை யாடல் செய்யும் மலர்க்கழல் வாழ்த்தி வைகி;

சிலபகல் கழிந்த பின்பு திருக்கட வூரில் நண்ணி
நிலவுதம் பணியிற் றங்கி நிகழும்நாள், நிகரில் காழித்
தலைவராம் பிள்ளை யாருந், தாண்டகச் சதுர ராரும்
அலர்புகழ் அரசுங் கூட அங்கெழுந் தருளக் கண்டு;

மாறிலா மகிழ்ச்சி பொங்க எதிர்கொண்டு மனையில் எய்தி
ஈறிலா அன்பின் மிக்கார்க் கின்னமு தேற்கு மாற்றால்,
ஆறுநற் சுவைகள் ஒங்க அமைத்தவா றருளே யன்றி
நாறுபூங் கொன்றை வேணி நம்பர்தம் அருளும் பெற்றார்.

கருப்புவில் லோனைக் கூற்றைக் காய்ந்தவா கடவூர் மன்னி
விருப்புறும அன்பு மேன்மேன் மிக்கெழும வேட்கை கூர
ஒருப்படும் உள்ளத் தன்மை உண்மையால் தமக்கு நேர்ந்த
திருப்பணி பலவுஞ் செய்து சிவபத நிழலிற் சேர்ந்தார்.

---

## நளவெண்பா

### சுயம்வர காண்டம்

மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரசம்
எங்கு மறைகென றியம்பினான்—பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கைக் கொழுந்தோடு நன்னாடன்
வேந்தர்மேற் றூதோட விட்டு. (30)

கெட்ட சிறுமருங்குற் கீழ்மகளிர் நீள்வரம்பில
இட்ட பசுங்குவளை யேரடித்த—கட்டி
கரையத்தே னூறுங் கடனாட னூர்க்கு
விரையத்தே ரேறென்றான் வேந்து. (31)

பைங்தெரியல் வேல்வேந்தன் பாவைபாற் போயினதன்
சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்—முந்தி
வருவான்போற் றேர்மேல் வருவானைக் கண்டார்,
பெருவானிற் றேவர் பெரிது. (32)

காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவற் றொழிலுக் கிசையென்றான்—ஏவற்கு
மன்னவனு நேர்ந்தான் மனத்தினான் மற்றதனை
இன்னதென வோரா திசைந்து. (33)

செங்கண் மதயானைத் தேர்வேந்தே. தேமாலை
எங்களிலே சூட்ட வியல்விமன்—மங்கைபால்
தூதாக வென்றானத் தோகையைத்தன் றாகத்தாற்
[illegible]ர்தாக வென்றானக் கோ. (34)

வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்—யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்
பாணாறுந் தாரானைப் பார்த்து. (35)

தேங்குவளை தன்னிலே செந்தா மரைமலரப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே—ஆங்கு
மதுநோக்குந் தாரானும் வாணுதலுந் தம்மிற்
பொதுநோக் கெதிர்நோக்கும் போது. (36)

காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய
யாவனோ விஞ்சைக் கிறைவனோ—தேவனோ
உள்ளவா சொல்லென் றரசற் குழைமீது
வெள்ளவா ணீர்சோர விட்டு. (37)

என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவா யென்றான் றொடையிற்றேன் றும்பிக்கே
ஊட்டுவா னெல்லாம் உரைத்து. (38)

போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே—சோதிச்
செழுந்தரள வெண்குடையாய், தேவர்களு நீயும்
எழுந்தருள்க வென்றாள் எடுத்து. (39)

விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் றிருமகள்பால்
நண்ணுறு புகழ்நளனு நன்குரைத்த—பெண்ணணங்கின்
வன்மொழியுந் தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியுஞ் சென்றுரைத்தான் மீண்டு. (40)

அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றா யெனவருண னாகண் டலன்றருமன்
மற்றோரு மீந்தார் வரம். (41)

அங்கவர்கள் வேண்டும வரங்கொடுக்கப் பெற்றவர்கள்
தங்களோடுந் தார்வேந்தன் சார்ந்தனன்மேல்—மங்கை
வயமருவு லைற மணக்கா வலாக்குச்
சுயமரந்தான் கண்டதோர் சார்பு. (42)

மன்னர் விழித்தா மரைப்பூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னஞ் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று. (43)

மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து. (44)

காவலரைத் தன்சேடி காட்டிக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணுநின்(று)
ஊசலா டுற்றாள் உளம். (45)

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து. (46)

மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியா ளாகிற் கடிமாலை—அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட வருமென்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து. (47)

கண்ணிமைத்த லாலடிகள் காசினியிற் றோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே யன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை யாங்கு. (48)

விண்ணரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலங் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். (49)

மல்லன் மறுகின் மடநா குடனாகச்
செல்லு மழைவிடைபோற் செம்மாந்து—மெல்லியலாள்
பொன்மாலை பெற்ற தோளோடும் புறப்பட்டான்
நன்மாலை வேலா னளன். (50)

வேலை பெறுவமுதம் வீமன் றிருமடந்தை
மாலை பெறுதகலும் வானோர்—வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லாக்கும்
இருங்கலியைக் கண்டா ரெதிர். (51)

எங்குவர வென்னென் றிமையவர்தங் கோன்வினவத்
தீங்கு தருகலியுஞ் செப்பினான்—நீங்கள்
விருப்பான வீமன் றிருமடந்தை யோடும்
இருப்பான் வருகின்றேன் யான். (52)

மன்னவரில் வைவே னளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான்—உன்னுடைய
உள்ளக் கருத்தை யொழித்தே குதியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து. (53)

விண்ணரசர் நிற்க வெறுத்தேதன் மணமாலை
மண்ணரசர்க் கீந்த மடமாதின்—எண்ணம்
கெடுக்கின்றேன் மற்றவடன் கேள்வனுக்குங் கீழ்மை
கொடுக்கின்றே னென்றான் கொதித்து. (54)

வாய்மையுஞ் செங்கோல் வளனு மனத்தின்கண்
தூய்மையு மற்றவன் றோள்வலியும்—பூமான்
நெடுங்கற்பு மற்றவற்கு நின்றுரைத்துப் போனான்
அடுங்கொற்ற வச்சிரத்தா னங்கு. (55)

செருக்கதிர்வேற் கண்ணியுடன் றேர்வேந்தன் கூட
இருக்கத் தரியே னிவரைப்—பிரிக்க
உடனாக வென்றா னுடனே பிறந்த
விடநாக மன்னான் வெகுண்டு. (56)

வெங்கதிரோன் றானும் விதர்ப்பன் றிருமடந்தை
மங்கலநாட் காண வருவான்போல்—செங்குமுதம்
வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கு நன்னெஞ்சில்
தீயடங்க வேறினன் றேர். (57)

இன்னுயிர்க்கு நேரே யிளமுறுவ லென்கின்ற
பொன்னமுதைத் தாமே புதைப்பார்போல்—மென்மலரும்
சூட்டினார் சூட்டித் துடிசே ரிடையாளைப்
பூட்டினார் மின்னிமைக்கும் பூண். (58)

கனிமொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தார்
அணிமொழிக்கு மண்ண லவற்கும்—பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றேவ ரொவ்வார் மகிழ்ந்து. (59)

---

## 3. மகா பாரதம்

### கண்ணபிரான் தூது

தமிழிலே பாரதம் பாடியவர் வில்லிபுத்தூர் ஆழ்வார். இவர் திருமுனைப்பாடி நாட்டிலுள்ள சனியூரிற் பிறந்தவர்; இவர் சமயம் வைணவம்; காலம் ஏறக்குறைய இற்றைக்கு நானூற்றைம்பது ஆண்டுகட்கு முன் என்பர். இவர் தந்தையார் பெயர் வீரராகவாசாரியார் என்பது. இவர் சந்தக்கவி செய்தலில் அதி சமர்த்தர்; வடமொழிப் புலமையும் வாய்ந்த பெரும்புலவர். இவர் காலத்திற்றான் வடசொற்கள் தமிழில் மிகுதியுங் கலக்கத் தலைப்பட்டன. வடமொழித் தொடர்களையும், வட சொற்களையுந் தற்சமமாகவும், தற்பவமாகவும் தம் நூலின்கண் ஆண்டிருக்கின்றனர். வக்கபாகையில் அரக வீற்

திருந்த ஆட் கொண்டான் என்னும் கொங்கர் குலவரசன் வேண்டுகோளுக் கிணங்கிப் பாரதம் பாடினர். பாரதத்தில் கொங்கர் குல அரசருடைய வெற்றி, வள்ளன்மை, மானம் முதலிய சிறந்த குணங்களைப் பலபடப் பாராட்டியுள்ளார். மதத்தால் வைஷ்ணவரே ஆயினும், சிவபெருமானையும் சிவனடியார்களையும் ஒருங்கே பெருமையாக எடுத்துக் கூறுவர். 'ஒரே ணந்தனைத் தேட ஒளித்தருளும் இருபாதத்தொருவன்,' என்று சிவபெருமானையும், 'கூறிய செஞ்சொலேடு குறிதெதிர் கொண்டவையை,' என்று திருஞான சம்பந்தரையும் மேம்பாடு தோன்றக் கூறியது காண்க. 'கலியன் எங்கள் மங்கையாதி,' எனத் திருமங்கை ஆழ்வாரை அன்புருகப் பாடினர்.

இவர் பாரதம் பாடியதற்குக் காரணம் பலப்பல வகையாகக் கூறுவர். ஆனால் பின் வரும் பாரதப் பாயிரச் செய்யுள், திருமாலின் வரலாறுகள் அதன்கண் இடையிடையே வழங்குதலே அவர் அதனைப் பாடியதற்குக் காரணமென விளக்கும்.

'மன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்;
மன்னு மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும்
என்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்.'

இவருக்கும், அருணகிரிநாதருக்கும் வாதம் நிகழ்ந்ததாகவும் ஒரு வரலாறு கூறுவர். இவர், தம்மோடு வாது செய்து தோற்றவர்களின் செவிகளை அறுக்கும் வழக்கமுடையவர் என்பர். அதற்கு ஆதாரமாக, குறும்பி அளவாக் காதைக் குடைந்து தோண்டி, எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி இல்லை,' என்னும் அடிகளையுங் காட்டுவர்.

இவர் பாட்டுக்கள் இடத்துக்கு இசைந்தவாறு சந்தம் தழுவி, சுவை மிகுதி பயந்து, தன்மை, உவமை முதலிய பல

அணிகள் பொருந்தியிருக்கின்றன. இவர் செய்யுட்களில் இயற் சொற்களே நிரம்பியிருக்கின்றன. இவரது போர்க்கள வருணனைகள் பெரிதும் மனத்தை மகிழ்விப்பனவாகும்.

கிருஷ்ணன் தூது பாரதத்துள் மிகச் சிறந்த பாகங்களுள் ஒன்று. ஐவரும் தத்தம் கருத்துக்களை எடுத்துக் கூறுதலும், கண்ணபிரான் அவரவருக்குத் தக்கவாறு மறுமொழி சொல்லலும், திரௌபதி வருந்துதலும், அவளுக்குக் கண்ணன் கூறும் ஆறுதல் மொழிகளும், அதனால் தங்கருத்துப் புலப்படுதலை நோக்கித் தருமபுத்திரனுக்குத் தக்க விடை கூறுதலும், சமத்கார சம்பத்துடன் பாடப்பட்டிருக்கின்றன. இப்பகுதி தனியே அச்சிட்டு உலாவுதலாலும், திண்ணைப் பள்ளிக்கூடங்களில் மாணாக்கர் இன்றும் இதனைப் பாடங்கேட்டு வருதலாலும் இதனது பெருமை இனிது விளங்கும்.

‘அரவுயர்த்தோன் உடன்மறுகு தாடிநீர்
　　வென்ற அந்நாள், அவன்முன் சொன்ன
விரதமொழி தவிராமல் வெங்கானம்
　　போய்மீண்டீர்; வெய்யோன் உங்கள்
குருநிலத்திற் பாதியினிக் கொடாதிருந்தால்
　　ஆங்கவனைக் கொன்று போரில்,
இருநிலத்தை ஆளனினித் துணிவதே
　　கடன்,’ என்றான் எம்பி ரானே. (60)

‘குரவரையுங் கிளைஞரையுங் குலத்துரிய
　　துணைவரையுங் கொன்று போர்வென்று
அரவநெடுங் கடலாடை அவனியெலாந்
　　தனியாளும் அரசு தன்னில்,

கரவுறையும் மனத்தாதை முனிக்குரைத்த
மொழிப்படியே கானந் தோறும்
இரவுபகற் பலமூல சாகநுகர்ந்
துயிர்வாழ்தல் இனிது நன்றே.' (61)

கோதிலான் இந்தமொழி கூறுதலும்
மாமாயன் கூற லுற்றான்,
மோதமருக் கிளைத்துநீர் மொய்த்தபெருங்
கானகத்தே முடுகிச் சென்றால்
,தலத்தோர் ஏசாரோ? புகன்றபெரு
வஞ்சினமும் பொய்த்தி டாதோ?
தியோ?' எனவுரைத்தான் ஆங்கதற்கு
நிகழ்தருமன் நிகழ்த்த லுற்றான். (62)

'நீதூது நடந்தருளி எமதுநிலை
யவர்க்குரைத்தால், நினைவின் வண்ணந்
காதூதி அளிமுரலுந் தண்பதியுந்
தாயமுந்தான் தாரா னாகில்,
மீதூது வளைக்குலமும், வலம்புரியும்
மிகமுழங்க வெய்ய காலன்
மாதூதர் மனங்களிக்கப் பொருதெனினும்
பெறுவன்; இது வசையும் அன்றே. (63)

பூந்தூர்வெம் பணிக்கொடியோன் மூதூரில்
நடந்துழவர் முன்றில் தோறும்
நந்தூரும் புனல்நாட்டின் திறம்வேண்டு;
நாடொன்று நல்கா னாகில்,

ஐந்தூர்வேண் டவையிலெனில் ஐந்திலம்வேண்டு ;
அவைமறுத்தால் அடுபோர் வேண்டு ;
சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின்
மருப்பொசித்த செங்கண் மாலே !' (64)

மூத்தோன்மற் றிவையுரைப்ப இளையோன்வெஞ்
சினம்மனத்தின் மூள மூள
நாத்தோமில் உரைபதறக் கதுமெனவுற்
றெழுந்திறைஞ்சி, ' ஞாலம் எல்லாம்
பூத்தோனே, பூந்தவிசிற் பூவையமர்
மணிமார்பா, புன்மை யாவுந்
தீர்த்தோனே, ஊனமிலான் மானமிலா
துரைப்பதற்கென் செய்வ,' தென்றான். (65)

'விரிகுழற்பைந் தொடிநாணி வேத்தவையின்
முறையிடுநாள் வெகுளேல் என்று
மரபினுக்கும், நமக்கும்உல குள்ளளவுந்
தீராத வசையே கண்டாய் !
எரிதழற்கா னகம்அகன்றும் இன்னமும்வெம்
பகைமுடிக்க இளையா நின்றாய் ;
அரவுயர்த்தோன் கொடுமையினும் முரசுயர்த்தோய்!
உனதருளுக் கஞ்சி னேனே.' (66)

காளுள உனைவிடுத்த கண்ணிலா
அருளிலிதன் காதன் மைந்தன்
தானுளுந் தரணியெல்லா மொருகுடைக்கீழ்
நீயாளத் தருவன் ; இன்றேல்

மேனுள்நம் உரிமையறக் கவர்ந்தபெருந்
துணைவனுனை வெறாத வண்ணம்
வானுள வானவர்கோன் தன்பதமற்
றவன்றனக்கே வழங்கு வேனே.' (67)

'போர்முடித்தான்; அமர்பொருது புலம்புறுசொற்
பாஞ்சாலி பூந்தண் கூந்தற்
கார்முடித்தான்; இளையோர்முன் கழறியவஞ்
சினமுடித்தான்; கடவுட் கங்கை
நீர்முடி,ந்தான் இரவொழித்த நீயறிய
வசையின்றி நிலையின் றேங்கும்
பேர்முடித்தான்; இப்படியே யார முடித்தார்?
இவனுடனே பிறப்ப தேகான்!' (68)

'அணிந்து வருஞ சமரிலெதிர்ந் தரவுயர்த்தோன்
உடனரசர் உடல மெல்லாந்
துணிந்திரண்டு படப்பொருது தொல்லைஉல
கரசாளத் துணிவ தல்லால்,
தணிந்தறமுங் கிளையுறவுங் கொண்டாடித்
தானின்னந் தனித்து தேவிப்
பணிந்திரந்து புவிபெற்றுண் டிருப்பதற்கே
துணிகின்றுன் பட்ட பாடே.' (69)

பரிவுடன்மற் றிவைகூறும் பவனகுமா
ரனை மலர்க்கை பணித்து நோக்கிக்,
'குருகுலத்தோர் போரேறே, குற்றமது
பார்க்குங்காற் சுற்ற மில்லை;

ஒருகுலத்திற் பிறந்தார்கள் உடன்வாழும
வாழ்வினைப்போல் உறுதி உண்டோ?
இருவருக்கும் வசையன்றோ? இருநிலங்கா
ரணமாக எதிர்ப்ப' தென்றான். (70)

'உரிமையுடன் தம்பியரன் றுணர்வறியா
மையின் அவைக்கண் உரைத்த மாற்றம்
பரிபவமோ? கேட்டோர்க்குப் பரிபவமென்
பதுபிறராற் பட்டா லன்றோ?
கருதிலது மற்றெவர்க்கும் ஒவ்வாதோ?
கண்மலரிற் கைப டாதோ?
பொருதொழிலுங் கடைநிலத்திற் கிடந்ததே'
எனமொழிந்தான் புகழே பூண்பான். (71)

'சூடுகின்ற துழாய்முடியோன் சுரருடனே
முனிவர்களுஞ் சுருதி நான்குந்
தேடுகின்ற பதஞ்சிவப்பத் திருநாடு
பெறத்தூது செல்ல வேண்டாம்;
வாடுகின்ற மடப்பாவை தன்வரமும்
என்வரமும் வழுவா வண்ணங்
கோடுகின்ற மொழியவன்பால் எனைத்தூது
விடுகவினிக் கொற்ற வேந்தே!' (72)

'மலைகண்ட தெனவென்கைம் மறத்தண்டின்
வலிகண்டும், மகவான் மைந்தன்
சிலைகண்டும், இருவர்பொருந் திறல்கண்டும்,
எமக்காகத் திருமால் நின்ற

நிலைகண்டும், இவள்விரித்த குழல்கண்டும்,
இமைப்பொழுதின் நேரார் தம்மைக்
கொலைகண்டு மகிழாமல் அவன்குடைக்கீழ்
உயிர்வாழக் குறிக்கின்றாயே!' (73)

வெம்புயலி மனும்வெகுண்டு, மீண்டும்இவை
யெடுத்துரைப்ப, மேக மேனிப்
பைம்பொனெடுந் தனித்திகிரிப் பரந்தாமன்
கருணையுடன் பரிந்து நோக்கி,
'அம்புவியின் முன்பிறந்தோர் அரசுநெறி
முறையுரைத்தால் அதுகே ளாமல்
தம்பியரும் மறுப்பரோ? தலைவ, இனிக்
கடுங்கோபந் தணிக,' வென்றான். (74)

காமக்கால முகிலூர்தி வானவர்கோன்
திருமதலை வணங்கி நின்று,
முக்காலங் களுமுணரும் முகுந்தனுக்கும்,
முதல்வனுக்கும் மொழிவான் மன்னே!
'அக்காலம் பொறுத்தவெலாம் அமையாமல்
இன்னம்இருந் தறமே சொன்னால்
எக்காலம் பகைமுடித்துத் திரௌபதியுங்
குழல்முடிக்க இருக்கின் றாளே!' (75)

'தேவரா யினும்பழைய தயித்தியரா
யினுமற்றுஞ் செப்பு கின்றோர்
யாவரா யினுமெதிர்ந்தோர் உயிருணவென்
றிருப்பதுவே என்கை வாளி

மூவராய் அவர்களுக்கு முதல்வனா
    கியமூர்த்தி முகில்தோய் பூகம்
மீவரால் உகளும்வயல் குருநாடன்
    இவனவன்பால் வேண்டு மாறே.' (76)

'தீண்டாத கற்புடைய செழுந்திருவைத்
    துகிலுரியச் செயலொன் றின்றி
நீண்டானே, கரியோனே, நிமலா, என்று
    அரற்றினளாய் நின்று சோர,
மாண்டார்போல் அதுகண்டும் மன்னவையில்
    யாமிருந்த மாசு தீர
வேண்டாவோ? வேண்டுவது மேம்படுநல்
    லறமேயோ? வேந்தர் வேந்தே!' (77)

'பொன்னாருந் திகிரியினான் போனாலும்,
    பொறைவேந்தன் புகன்ற வெல்லாஞ்
சொன்னாலும் அவன் கேளான், விதிவலியாற்
    கெடுமதிகண் தோன்றா தன்றே?
எந்நாளும் உவர்நிலத்தில் என்முளைவித்
    திடினும்விளை வெய்தி டாது;
பன்னாகந் தனக்கமிர்தங் கொடுத்தாலும்
    விடமொழியப் பயன்கொ டாதே.' (78)

பார்த்தனிவை புகன்றிறைவன் பணித்தருள
    இருந்ததற்பின் பரிவி னோடுந்
தீர்த்தனிரு பதமிறைஞ்சித் தருமனையுங்
    கைதொழுது சினங்கொள் வேலான்

நீக்தநெடுங் கடலெழுபார் அடல்ஐவர்
பெறுவரெனும் நிகழ்ச்சி பொய்யோ ?
கோத்தருமன் தனிலாண்மை கூறுதோ ?
கூறுகநீ கொற்ற வேந்தே' (79)

'கேவலந்தீர வலியபடை கிடக்கமுதற்
கிளர்மழைக்குக் கிரியொன் றேந்து
கோவலன்போய் உரைத்தாலுங் குருநாடும்,
அரசும்அவன் நொடிக்க மாட்டான்;
நாவலம்பூ தலத்தரசர் நாடிரந்தோம்
எனநம்மை நகையா வண்ணங்
காவலன்றன் படைவலியும், எமதுதடம்
புயவலியுங் காண லாமே.' (80)

'அன்னபடை அரம்பைதனை அவுணர்கவர்ந்
திடஇமையோர் அரசுக் காக
முன்னம்அவர் உடன்பொருது சிறைமீட்டான்
நங்குலத்து முதல்வன் அன்றோ ?
பன்னவையில் யாங்காண மடவரலைத்
துகிலுரிந்த வலியோன் தன்பால்
இன்னமிரந் தவன்குடைக்கீ ழிருந்தக்கால்
நம்மையுல கென்சொ லாதே ?' (81)

'காநெறிபோய்க் கரந்துறைந்து கடவநாட்
கழித்ததற்பின் கானம் நீங்கி
ஈனமிலா வகைவந்தார் நந்துணைவர்
எனச்சிறிதும் இரங்கா னாகில்,

மாநகரும் வளநாடும் உரிமையுந்தன்
 மொழிப்படியே வழங்கா னாகில்,
தான்அறியா தவன்பிறர்போய்க் கற்பித்தால்
 அறிவனோ? தரணி வேந்தே!' (82)

நகுலன்இவை யுரைத்ததற்பின் நன்றெனக்கை
 யமைத்தருளி, 'நகுலன் சொல்லும்,
இகல்விசயன் தன்மொழியும், திறல்வீமன்
 இயம்பியதும் யாவுங் கேட்டோம்;
புகலரிய உணர்வுடையோய், புகழுடையோய்,
 திறனுடையோய், புகல்நீ,' என்ன
முகிலனைய திருமேனி முகுந்தனுக்கு
 மனமுருக மொழிகின் றனே. (83)

'சிந்தித்த படிநீயுஞ் சென்றாலென்?
 ஒழிந்தாலென்? செறிந்த நூறு
மைந்தர்க்குள் முதல்வன்நிலம் வழங்காமல்
 இருந்தாலென்? வழங்கி னாலென்?
கொந்துற்ற குழலிவளும் முடித்தாலென்?
 விரித்தாலென்? குறித்த செய்கை
அந்தத்தின் முடியும்வகை அடியேற்குத்
 தெரியுமோ? ஆதிமூர்த்தி!' (84)

'முருகவிழ்க்கும் பசுந்துளப முடியோனே,
 அன்றலகை முலைப்பா லுண்டு
மருதிடைச்சென் றுயர்சகடம் விழவுதைத்துப்
 பொதுவர்மனை வளர்ந்த மாலே,

ஒருவருக்குந் தெரியாதிங் குன்மாயை;
யானறிவேன் உண்மை யாகத்
திருவுளத்துக் கருத்தெதுவோ? அதுவெனக்குங்
கருத்தென்ருன்,' தெய்வம் அன்ஞன். (85)

இவ்வண்ணஞ் சாதேவன் இயம்புதலும்
நகைத்தருளி, இகலோர் சொன்ன
அவ்வண்ணம் புகலாமல் விரகுரைத்தான்
இவன் என்ன, அவனோ டாங்கோர்
பைவண்ண மணிக்கூடந் தனில் எய்திப்
'பாரதப்போர் பயிலா வண்ணம்
உய்வண்ணஞ் சொல்லுகநீ யுபாயம்,' எனத்
தொழுதுரைப்பான் உரகெகாள் வேலான். (86)

வேறு

'நீபா ரதவமரில் யாவரையும் நீருக்கிப்
பூபா ரந்தீர்க்கப் புரிந்தாய்; புயல்வண்ணு,
கோபாலா, போரேறே, கோவிந்தா, நீயன்றி
மாபா ரதமகற்ற மற்ருேர்கொல் வல்லாரே?' (87)

'பாராளக் கன்னன், இகல் பார்த்தனே முன் கொன், றணங்கின்
காரார் குழல்களைந்து, காலில்தளை பூட்டி
நேராகக் கைப்பிடித்து நின்னையும்யான் கட்டுவனேல்
வாராமற் காக்கலாம் மாபா ரதம்,' என்ருன். (88)

'முன்னம்நீ கூறியவை யெல்லாம் முடித்தாலும்
என்னைநீ கட்டுமா றெவ்வா' றென மாயன்,
'உன்னைநீ தானு முணராதாய், உன்வடிவம்
தன்னைநீ காட்டத் தளைந்திடுவன் யான்,' என்ருன். (89)

மாயவனும் அன்பன் மனமறிவான் ‘ கட்டுக ’ என்(று)
ஆய வடிவுபதி னாறு யிரங்கொண்டான் ;
தூயவனும் மூலமாந் தோற்றமுணர்ந் தெவ்வுலகும்
தாய அடியிணைகள் தன்கருத்தி னாற்பிணித்தான். (90)

‘அன்பா லின்றென்னை யறிந்தே பிணித்தமைநன்(று)
என்பாதந் தன்னை யினிவிடுக,’ வென்றுரைப்ப,
‘வன்பா ரதப்போரில் வந்தடைந்தேம ஐவரையும்
நின்பார்வை யாற்காக்க வேண்டும் நெடுமாலே !’ (91)

என்றென் றிறைஞ்சி யிருதா மரைத்தாளில்
ஒன்றுங் கதிர்முடியாற் ‘கோ’மென் றுரைத்தருளி,
‘இன்றிங் கிருவேமும் இப்போ துரைத்தமொழி
ஒன்றும் பிறரறிய ஓதா தொழி’ கென்றான். (92)

ஆண்டிருந்த அவைநீங்கி அறிவுடையோர் இருவோரும்
பாண்டவர்கள் முன்னெய்திப் பழுதில்புகழ்ப் பாஞ்சாலி
நீண்டகருங் குழல்சோர நின்றானை, முகநோக்கி
ஈண்டவரில் இளையோனுஞ் சந்துமிக இனிதென்றான. (93)

‘தருமனுக்குங் கருத்திதுவே, தமருடன்போர் புரியாமல்
இருநிலத்தில் உடன்வாழ்தல் எனக்குநினை’ வென்றுரைத்தான்
வரிமலர்க்கண் புனல்சோர, மலர்மறந்த குழல்சோர,
விரைமலர்ச்செஞ் சேவடிக்கீழ் வீழ்ந்தழுதாள் மின்னனையாள்.

‘கற்றைக் குழல்பிடித்துக் கண்ணிலான் பெற்றெடுத்தோன்
பற்றித் துகிலுரியப் பாண்டவரும் பார்த்திருந்தார் ;
கொற்றத் தனித்திகிரிக் கோவிந்தா, நீயன்றி
அற்றைக்கும் என்மானம் ஆர்வேறு காத்தாரே !’ (95)

‘மன்றில் அழைத்தெனக்கு மாசளித்த மன்னவன்பால்
சென்று தமக்கைந்தூர் திறல்வீரர் பெற்றிருந்தால்

அன்று விரித்த வருங்கூந்தல் வல்வினையேன்
என்று முடிப்பதினி எம்பெருமான்,' என்றழுதாள். (96)
'கண்டிருந்த திவன்கரத்தில்; தனுவிருந்த தவன்கரத்தில்;
வண்டிருந்த பூங்குழல்மேல் மாசிருந்த தெனவிருந்தாள்;
கண்டிருந்தீர் எல்லீரும்; காதலர்பால் ஊர்வேண்டி
உண்டிருந்து வாழ்வதற்கே உ ரக்கின்றீர் உரையீரே;'
'சண்டமுகில் உருமனைய சராசந்தன் தனக்கஞ்சி
வண்டுவரை அரணாக வடமதுரை கைவிட்ட
திண்டிறல்மா தவன்மதியோ? திகழ்தருமன் தன்மதியோ?
பண்டுமவர் கருத்தறிந்து பார்ப்பாய்வேண் டுவ' தென்றான்.
சாத்தகிபின் றிவையுரைப்பச் சடைக்குழலாள் அழுதாற்றக்
கோத்தருமன் முதலாய குலவேந்தர் ஐவரையும்
பார்த்தருளி அருள்பொழியும் பங்கயக்கண் நெடுமாலும்
ஏத்தரிய பெருங்கற்பின் இளையாளுக் கிவையுரைப்பான்:
'நல்லாண்மைப் பாண்டவர்க்குத் தூதுபோய் மீண்டதற்பின்
நல்லாய், உன் பைங்கூந்தல் நானே முடிக்கின்றேன்;
எல்லாருங் காண இனிவிரிப்ப தெண்ணரிய
புல்லார்தம் அந்தப் புரமாதர் பூங்குழலே.' (100)
'நோன்று பிணியோர், துறந்தோர், அடங்காதோர்,
கன்று சினமனத்தோர், கல்லா தவர், இளையோர்,
ஒன்றும் முறைமை யுணரா தவர், மகளிர்
என்றும்இவர் மந்தணத்தின் எய்தப் பெறாதாரே;' (101)
என்னக் கழறி யிருந்தோ ருரைதவிர்த்து,
'நின்னொப் பவரில்லாய், நீயே' கெனவுரைப்ப,
மன்னர்க்கு மன்னவன்பால் மாயோனுந் தூதாகிப்
பொன்னுற்ற நேமிப் பொருபரித்தேர் மேற்கொண்டான்

# குறிப்புரை

---

## I. கடவுள் வாழ்த்து

### (எண் செய்யுளைக் குறிக்கும்)

**1. திருஞானசம்பந்தர் :**

1. விடல் - மலைப்பிளப்பு. அசைத்து - கட்டி. வெற்பரையன் - இமயமலைக்கரசன்; அரையன் - போலி. பாவை - உமாதேவியார்; பாவை - பதுமை. மிக்க அழகிற்கு உவமையாகக் கூறப்படும்: செயற்கை அழகு போல இயற்கையழகு குறைபாடின்றி இருத்தல் அருமை யாதலின். அடல் ஏறு - வலிமையுள்ள எருது, எருது - தருமத்தைக் குறிக்கும் என்பர்; அது - பகுதிப் பொருள் விகுதி. அஞ்சொலீர் - விளி; இது தாருகவனத்துள் சிவபெருமான் பிட்சாடன மூர்த்தியாய்ச் சென்ற செய்தியை உள்ளிட்டது. பலி - பிச்சை. அடிகள் - கடவுள்; இப்பெயர் யோக கோலம் பூண்டமையான் எய்தியது போலும். திரை - அலை; சுருங்குதலை யுடையது எனக் காரணக்குறி. காவிரி - காவேரி நதி; கவேரன் சம்பந்தமுடையது எனக் காரணக்குறி; வடமொழி தத்திதம். திடல் - திடர்; மேடு. கங்குல் - இரவு. சுரி சங்கம் வினைத்தொகை. சங்கம் - அம் சாரியை. சங்கு வந்து கடலிலே கலந்து, அலைகளால் மோதப்பட்டு, இராப்பொழுது தங்கி முத்தை ஈனும் என்க. சங்கு இயற்கையாக முத்து ஈனுதலுக்குக் காரணங் கற்பித்தார்.

2. கங்காளம் - தசை நீங்கிய எலும்பு. கானப்பேர் - ஒரு சிவஸ்தலம். மங்கை பங்காளர் - உமாதேவியாரைப் பாகத்திலுடையவர். இது போக கோலம்: இஃது உயிர்களின் பொருட்டுக்கொண்டது என்பர்; 'போகியாய் இருந் துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்' - சிவஞான சித்தியார். திரிசூலம் - மூத்தலை வடிவுள்ள சூலப்படை; இதனை ஏந்தியது மும் மூர்த்திகளும் சிவனே என்பதை விளக்கும் என்பர். கொங்கு - தேன். கூதல் - குளிர். செங்கானல் - செம்மை + கால் + நல். குருகு - கொக்கு. செங்கானல் வெண் குருகு பைங்கானல்

என்பது சொல்முரண் அணி குருகு நுழைந்து, உலர்த்தி, நீங்கித் தேரும் என வினை முடிவு செய்க.

3. முடை - நாற்றம். சங்கரனார் - உயிர்களுக்கு இன்பத்தைச் செய்பவர். ஆர் - உயர்வு குறித்தது. தழல் - நெருப்பு; சிவபெருமான் நெருப்பு வடிவினர் என்பதைச் 'சோதியே சுடரே சூழ் ஒளி விளக்கே' என மணிவாசகரும் அருளிச் செய்தது காண்க. மந்தி - பெண் குரங்கு. மொட்டு - அரும்பு. பின்னிரண்டு அடிகளின் அழகை ஊன்றி நோக்குக.

4. உலாவும் என்றும் பெயரெச்சம் இடையில் தொக்கது. (நன் - சூ - 341). புரம் - பட்டணம். மூன்றும் என்புழி உம்மை முற்று. வாய் அம்பு - கூர்மையுடைய அம்பு; குறி தப்பாத அம்பு. பிரசம் - தேன். தென்றலார் - ஆர் - உயர்வுப் பொருட்டு; அஃறிணையில் வந்தது; சந்தியார், உந்தியார் முதலியவற்றிற் போல. அடிவருடல் என்பதற் கேற்பத் தென்றலார் என உயர்திணை போலக் கூறி யருளினார். கண் வளருதல் - தூங்குதல்; கணு முற்றுதல். குயில் கூவுதலாலும், தென்றல் அடி வருடுதலாலும் கரும்பு ஆகிய செல்வன் கண் வளர்கின்றான் என மற்றோர் பொருள் தொனித்தல் காண்க. கரும்பு தென்றற் காற்றால் முதிர்ந்தபடி கூறி யருளினார். கண் வளர்தல் என்பது தூங்குதலுக்கு மங்கல வழக்கு.

5. மஞ்சு - வலி. அடர்த்தல் - வருத்துதல். மைந்தர் - வீரர்; அழகுடையவர். இன்சாயல் - இஞ்சாயல் என்று எதுகை நோக்கித் திரிந்தது. சாயல் - மென்மை. சாலி - நெற்பயிர். தோள் என்புழி எண்ணும்மை தொக்கது. அரக்கர் கோனை வருத்தி உடனே அருள் புரிந்தமை அருளின் அழகென்பார் மைந்தர் என்றார். தேங்காய் முற்று விழுந்ததற்கு அஞ்சி எருமைக்கன்று ஓடி நெற்கதிர்களை உழக்கி, வயலில் படிந்ததென்க. இளமேதி - எருமைக் கன்று. இரிதல் - ஓடுதல். உழக்குதல் - கலக்குதல். நீர்வளந் தோன்றக் 'கமலவயல்' என்றார். இராவணன் கயிலாயமலை யெடுத்த செய்தி இங்குக் குறிக்கப் பட்டது.

## 2. திருநாவுக்கரசர் :

6. குனித்த புருவம் - வளைந்த புருவம். குமிண் சிரிப்பு - அரும்பிய நகை. பவளம்போல் மேனி - உருவுவமை. மனித்தப்

பிறவி - எதுகை நோக்கி இரட்டியது. எடுத்த பொற்பாதம் - நடராச மூர்த்தியினது தூக்கிய திருவடி; அஃது அருளைக் குறிக்கும் என்பர்.

7. சங்க நிதி - சங்கு வடிவாய செல்வம். பதும நிதி - தாமரை வடிவினதாகிய செல்வம். இவை இரண்டும் குபேர னுக் குரியன. ஏகாந்தர் - அன்பர். தொழுநோய் - குட்ட நோய். கண்டீர் - முன்னிலை யசை; உம்மைகள் சிறப்பு.

8. நமன் - இயமன்; ஞமன், சமன் என்றும் வரும். நடலை - துன்பம். ஏமாத்தல் - இன்புறுதல். இன்பமே என் பதில் ஏ தேற்றம். குழை - குண்டலம். இணையே என்புழி ஏ பிரிநிலை. இத்திருப்பாட்டு இறைவன் திருவருளைப் பெற்றவர்களின் அளப்பரும் பெருமையை இனிது புலப்படுத்து கிறது. இது திருநாவுக்கரசு சுவாமிகள் பல்லவர் கோன் கட்டளையை அமணர் கூறியபோது பாடியது.

3. குலசேகரர் :

9. 'உடற் பிறவி' என்றார் துறக்கல் உற்றார்க்கு உடம்பு மிகையாகலின் ஆனே றேழ்வென்றான் - கண்ணன் அவதாரத் தில் நிகழ்ந்த செய்தியை உட்கொண்டது. கூனேறு சங்கம் - வளைவையுடைய பாஞ்ச சன்னியம் என்னுஞ் சங்கு. இடத் தான் - இடக்கையில் உடையவன் வேங்கடம் - திருப்பதி. கோனேரி - திருமலையிலுள்ள தீர்த்த விசேடம். குருகு - பற வை அடிமைத்திறமல்லாமல் இப்பிறவியை யான் வேண்டேன்; அத்தகையேன் வேங்கடத்துக் கோனேரி வாழும் குருகாய்ப் பிறத்தலுண்டாயின் அதனை விழைந்து பெறுவேன் என ஆழ் வார் தமக்குத் திருவேங்கடமுடையான் பால் உளதாகிய பற்று மிகுதியை அருளிச் செய்தனர்.

10. ஆனாத செல்வம் - ஒழியாத செல்வம். மண்ணரசு. இவ்வுலகத்தில் ஏகசக்ராதிபத்தியம்பெற்று வாழும் அரச போகம். பற்றுக் கிடனாகிய இவ்வுலகில் அரசபோகத்தையும் விரும்பேன்; அது போன்றே விண்ணரசும் பற்றுக்கிடமாத லின் இந்திரச் செல்வமும் விரும்பேன்; எனினும் திருவேங் கடச் சுனையில் இழிந்த மீனாய்ப் பிறக்கும் நல்வினையை அடை யப் பெரிதும் விரும்புவேன் என்றருளிச் செய்தார். மீன் இழிந்ததெனினும் குருகுபோல் வேறோர் இடத்திற்குப் பறந்து

போம் தன்மை இல்லாததாதலின் அதனினும் சிறந்ததாம். முன் பாட்டில் குருகைக் கூறினவர் இதில் மீனைக் கூறியது அதனினும் இஃது இழிந்தமையை நோக்கிப் போலும்.

11. ஒண் - ஒளி பொருந்திய. வேலை - இங்கே அலை. கண் துயிலல் - அறிதுயில் செய்தல்; யோக நித்திரை என்றுங் கூறுவர். மாயோன் - விசித்திர செயலுடையவன் என்பது சொற்பொருள். கழல் - ஆகுபெயர். திரு - நல்வினை. 'செண்பகமாய் நிற்கும் திரு' என்றார் சிறிது காலத்தே தோன்றி யழியாது பல்லாண்டு நிலைத்திருக்கவேண்டி. செண்பகமாய் நின்று அவன் திருவடிகளைக் கண்டு களிப்பேன் என்றார். இதில் அசரப்பொருளைக் கூறியமை[illegible] நோக்குக. குருகு - பறப்பது; மீன் - நீந்துவது; மரம் - நிற்பது. பண் - இராகம்.

12. கம்பம் - கட்டுத்தறி. இவ்வரசு - இகரச்சுட்டு அதன் இழிவை உணர்த்திற்று. [illegible]ம்பகம் - தூண். இத்திருப்பாசுரத்தில் உயிரல் பொருளாகிய தம்பகமாகவும் நிற்குந் தவத்தை மேன்மையாகக் கொண்டு விரும்புவேன் அன்றி இவ்வரசை விரும்பேன் என்றார் என்க.

**4. திருமங்கை ஆழ்வார் :**

13. எரி - நெருப்பு. கால் - காற்று. விசும்பு - ஆகாயம். சமயம் - மதம். எர் - எழுச்சி. மூவர் - அயன், அரி, உருத்திரன்; உம்மை - முற்று. இமையவர் - தேவர். பொன் உருவம் - பிரமனது உருவம். செந்தீ உருவம் - உருத்திரனுருவம். கடல் உருவம் - திருமாலுருவம். உருவும் - இதில் உம்மை முற்று. முகில் - மேகம்; அடிகள் - கடவுள். ஐம்பூதங்களாகவும், பல சமயங்களாகவும், மும்மூர்த்திகளாகவும் விளங்கும் பரம்பொருள் ஒன்றே என்பது கருத்து.

**5. திருப்போரூர்ச் சந்நிதி முறை :**

14. சோமன் - சந்திரன்; சோமகிரணம் - சந்திரிகை. நீபம் - கடம்பு. தொடை - மாலை. தொடு - முதனிலை. காமர் - அழகு. கலித்த - ஒலித்த. உபயம் - இரண்டு. சேமநிதி - காவலாக வைத்த பொருள். சுரர் - கடவுளர். தெய்வத்தரு - கற்பக விருக்ஷங்கள். பூரணம் - நிறைவு. ஆரணம் - வேதம். பூமன் - பூவில் வாழும் தலைவன்; பிரமன். போரூர் - செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள முருகன் ஸ்தலம்.

15. பிறவி - தொழிற் பெயர்; வி - விகுதி. அவை - பிறப்புக்கள். வனசம் - தாமரை; வனஜம் என்னும் வடமொழி திரிந்தது; வனஜம் - நீரில் பிறப்பது. துணை - பாதம். அளி - தேன். புயல் - மேகம். மும்மதம் - கன்னம், கபோலம், பீஜம். வாரணம் - யானை. மும்மதம் ஈண்டு யானைக்கு அடை. அற்புதன் - வியக்கத் தக்க செயலை யுடையவன். இதில், 'கசசித்தாய் உசிலை மோந்து கண்ணேடணைக்குந் திருத்தாளா,' என்று கூறியநயத்தை உணர்க.

6. திருவாருட்பா :

16. சண்பை - சீகாழி. கவுணியர் - கவுணிய மரபினர். மிடறு - கழுத்து. காரார் மிடற்றுப் பவளமலை - சிவபெருமான்; கரிய கண்டத்தையுடைய பவளமலை போன்ற நிறத்தையுடையவர். ஏர் - அழகு; இன்பகுதலை - பேரின்பத்தைத் தரத்தக்க மழலைச் சொல். ஆருயிர் - அருமை + உயிர். பிறங்குபவர் - விளங்குபவர்.

---

# II. நீதி

1. திருவள்ளுவர் :

1. வால் அறிவன் - மெய்யுணர்வினை யுடையவன். எவன் என்னும் வினைப்பெயர் என்னென்றாய் ஈண்டு இன்மை குறித்து நின்றது. கொல் - அசைநிலை. பிறவிப் பிணிக்கு மருந்தாகலின், 'நற்றாள' என்றார். கடவுளைத் தொழுதலே கல்வியறிவிற்குப் பயன் என்பது கருத்து. தொழாஅர் - அளபெடை.

2. அரிய - அருமையான செயல்கள்; குறிப்பு வினையாலணையும் பெயர். செய்கலாதார் - செய்யமாட்டாதார்.

3. அந்தணர் - அம் + தணர்; அழகிய தட்பத்தினையுடையார்; தட்பம் - அருள்; ஏதுப்பெயர். பூணுதல் - விரதமாகக் கொள்ளுதல். அந்தணர் என்னும் பெயர் உயிர்கள்மேல் அருளுடையவராய முனிவருக்கே பொருந்து மென்பது கருத்து.

4. மனத்து, அத்து - சாரியை; அகரம் முதற்கெட்டது; 'அத்தினகரம் அகர முனையில்லை.' ஆதல் - ஆக; வியங்கோள் வினைமுற்று. பிற - சொல்லும் வேடமும். ஆகுலம் - ஆரவாரம்.

நீர - தன்மையுடையன ; குறிப்பு வினைமுற்று. மனத்துக்கண் - அனைத்தறன் - வழிமெயதுகை.

5. தென்புலத்தார் - பிதிரர் ; தென்றிசையி லிருப்பவர். புலம் - திசை. தெய்வம் - சாதியொருமை. விருந்து - புதுமை ; இங்குப் புதியராய் வந்தார் ; ஆகுபெயர். ஒக்கல் - சுற்றத்தார். என்ற என்பது விகாரமாயிற்று. ஆங்கு-அசை. தான் இருந்தே அறம் செய்ய வேண்டுதலின் தன்னை ஓம்புதலும் தருமமாம். இவ்வைவகைக்கும் ஏந்து கூறுகொண்டு ஆறுவது கூற்றை அரசன் பெறுதலின் இறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று.

6. தொழாஅள் - வளபெடை. கொழுநன் - கணவன். பெய் என - பெய்யென்று சொல்ல. தெய்வமுங் கற்புடையாளுக்கு ஏவல் செய்யும் என்பது கருத்து. 'தெய்வந் தொழாஅள் கொழு நற்றொழு தெழுவாள் பெய்யெனப் பெய்யும் பெரு மழை என்ற அப்பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்' என்றார் சீத்தலைச் சாத்தனார்.

7. மற்று - வினைமாற்று தீண்டல் - தீண்டு + அல் ; தொழிற் பெயர். கேட்டல் - கேள் - பகுதி ; தல் - விகுதி. மக்களது மழலைச் சொல்லை யன்றி அவர் கற்றறிவுடையராய்ச் சொல்லுஞ் சொல்லும் இன்பமாகலின் பொதுப்படச் 'சொல்' என்றார்.

8 ஆற்றும் - செய்யும். உதவி - கைம்மாறு. நோற்றல் - புரிதல்.

9. எல்லாம் - எல்லாப் பொருளானும். என்பு - உடம்பானும் ; இங்கு ஆனுருபுகள் தொக்கன. தமக்கு - தமக்கே. ஈண்டுப் பிரிநிலை ஏகாரம் தொக்கது.

10 அனிச்சம் - அனிச்சப்பூ ; ஆகுபெயர். விருந்து செய்வோருக்கு இன்முகமும், இன்சொல்லும், நன்றாற்றலும் என மூன்றும் இன்றி யமையாதன. அவற்றுள், முதலதாகிய இன்முகம் இல்வழி அவர் வாடி நீங்குவர் என்க.

11. இனியகனி - ஔவை உண்ட நெல்லிக்கனி போல அமிழ்தாவனவற்றை. இன்னாத காய்கள் என்றது காஞ்சிரங் காய் போல நஞ்சாவனவற்றை. காஞ்சிரங்காய் - எட்டிக்காய். கவர்ந்தற்று - விகாரம் ; 'கனி யிருக்கக் காய் கவர்ந்த கள்வனேனே' என்றார் திருநாவுக்கரசரும்.

12. காலத்தினல் - காலத்தில்; வேற்றுமை மயக்கம். ஞாலத்தின் - நிலவுலகத்தினும்; இன் ஐந்தனுருபு; உறழ்பொரு. காலத்தை நோக்கி நன்றியை உணர வேண்டுமே அன்றிப் பொருளை நோக்கலாகாது என்றார்.

13. கோல் - துலாம். கோடாமை - ஒரு பக்கம் சாயாமை; எதிர்மறைத் தொழிற்பெயர். சான்றோர் - குணங்களால் நிறைந்தவர்.

14. உய்க்கும் - செலுத்தும். ஆர் - அருமை என்னும் பண்பின் விகாரம், 'ஈறுபோதல்' (நன். சூ. 136). இருள் - ஓர் நரகவிசேடம். 'உயக்கும்' என்றதனல் தன் முயற்சியின்றியே அதுவே செலுத்து மென்பதும் 'உய்த்துவிடும்' என்றதனல் உய்த்தல் ஒருதலையாகாவிடினும் உய்த்துவிடுதல் ஒருதலையே என்பதும் பெறப்படும்.

15. யா - அஃறிணைப் பன்மை வினப்பெயர். சோகாப்பர்- துன்புறுவார், செம்மாப்பர், இறுமாப்பர்போலச் சோகாப்பர் என்பது ஒரு சொல்.

16. விழுப்பம் - சிறப்பு. ஓம்பப்படும் - பாதுகாக்கப்படும். உயிரினும் - உயிரைக் காட்டினும்; இன் - ஐந்தனுருபு; உறழ் பொரு.

17. அழுக்காறு - பொறாமை. கொடுமை பற்றிப் 'பாவி' என்றார். 'பசிப்பிணி என்னும் பாவி' என்று பிறரும் கூறு மாறு காண்க. திரு - செல்வம். தீஉழி - நரகம்.

18. புறம் கூறுதல் - காணதபோது இகழ்ந்து, கண்ட போது புகழ்தல். அறம் - அறநூல்கள்; ஆகுபெயர். தரும் - இடவழுவமைதி. ஆக்கம் - மறுமையில் அடையும் பயன்.

19. பாராட்டுதல் - பலகாலுஞ் சொல்லுதல். எனல் - என்று சொல்லற்க; என்று சொல்லுக. அல் விகுதி வியங்கோள்; முன் எதிர் மறையினும், பின் உடம்பாட்டினும் வந்தது. அறிவு என்னும் உள்ளீடு இன்மையின், மக்கட்பதடி என்றார்.

20. அப்பொழுதே சுடுவதல்லது மற்றொரு காலத்தும், மற்றொரு இடத்திலும், மற்றோர் உடம்பினுஞ் சென்று சுடுதல் தீக்கின்மையின், தீயினும் அஞ்சப்படும் என்றார்.

21. ஒத்தது- உலகநடை. அறிவான் – அறிந்து செய்பவன். மற்றையான் - அறிந்து செய்யாதவன். உயிரின் அறிவுஞ் செயலுங் காணுமையின், செத்தாருள் வைக்கப்படும் என்ருர்.

22. ஊருணி – ஊரின் வாழ்வார் தண்ணீர் உண்ணுங் குளம். அவாம் - பெயரெச்சத்து உயிர் மெய் கெட்டது ; விரும்பிச் செய்யும். நிறைதல் என்னும் நீரின் தொழில் இடத்தின் மேல் ஏறப்பட்டது.

23. ஒப்புரவு - உலகநடையினை அறிந்து செய்தல். ஒப்புரவினுல் கேடு வருமெனின், அக்கேட்டை ஒருவன் தன்னை விற்ருயினுங் கொள்ளவேண்டும் என்று ஒப்புரவினது நன்மை மிகுதியைக் கூறினுர்.

24. கொளல் - ஏற்றல். நல்லாறு – நல் + ஆறு ; நல்ல வழி. எனினும், என்பது இரண்டிடத்தும் அவவாறு சொல்லுவார் இன்மையை விளக்கிற்று. ஏ - பிரிநிலை.

25. புகழ் – புகழுக்குக் காரணமாகிய குணங்கள் ; ஆகுபெயர். புகழுக்குரிய குணங்களோடு பிறவாதார் விலங்காய்ப் பிறத்தல் நன்று என்ருர்.

26. அருள் - எல்லா உயிர்கள் மேலும் செல்லும் மனவுருக்கம். பூரியார் - இழிந்தோர். உம்மை - இழிவு சிறப்பு.

27. அவி - நெய் முதலியன. ஆயிரம் - ஆகுபெயர் ; வேள்விகள். வேட்டல் - செய்தல். செகுத்தல் - போக்கல். வேள்வி செய்தலால் வரும் பயனைக் காட்டிலும் ஒன்றன் உயிரைக் கொன்று அதன் ஊனை உண்ணுமையால் வரும் பயனே பெரிதென்ருர். 'கொல்லா விரதம் குவலயமெல்லா மோங்க, எல்லார்க்குஞ் சொல்லுவது என்னிச்சை பராபரமே' என்ருர் தாயுமானுரும்.

28. உள்ளத்தால் என வேண்டாது கூறினுர் வலியுறுத்தற் பொருட்டு. உள்ளலும் என்பது இழிவு சிறப்பும்மை. அல் - வியங்கோள் விகுதி ; எதிர்மறையில் வந்தது.

29. புரை தீர்ந்த நன்மையைப் பயத்தலாவது கேடாதல், சாக்காடாதல் எய்த நின்றதோருயிர் அச்சொற்களின் பொய்ம்மையானே அதனினீங்கி இன்புறுதல்.

30. பொய்யாமையான் வரும் விளக்கம் அறியாமையாகிய இருளை ஒழித்தலின் சூரியன், சந்திரன், தீ முதலியவற்றான் வரும் விளக்கத்தினுஞ் சிறந்த தென்றார்.

31. கொல்லும் - கடுந்துன்பங்களைத் தரும். ஏகாரம் - பிரிநிலையோடு கூடிய தேற்றம்.

32. இணர் எரி - சுடரையுடைய நெருப்பு துன்பத்தின் மிகுதி தோன்ற 'இணரெரி' என்றார்.

33. முற்பகல் பிற்பகல் என்பன பின் முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை. பகல் - பகு - பகுதி. 'முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்' என்பது காண்க.

34. செய்யற்க - செய் - பகுதி, க - வியங்கோள் வினை முற்று விகுதி; அல் - எதிர்மறை விகுதி.

2. நாலடியார் :

35. அட்டுண்ணும் - சமைத்துண்ணும் இடுக்கண் - துன்பம்; இதே பொருளில் வரும் சொற்கள் புன்கண், அலகண், பழங்கண், உறுகண் முதலியன. கேளிர் - சுற்றத்தார்; இர் - விகுதி; இது கேள் என்று விகுதி பெறாமலும் வரும். இதினின்று வந்த கேள்வன் என்ற பெயர் கணவனைக் குறிக்கும். வரினும் என்பதிலுள்ள உம்மை அருமை தோன்ற நின்றது. கையாறு என்பதில் ஈறுதொக்கது. கையாறு - கைக்கு நெறி;

36. வரன்றி - வாரிக்கொண்டு. வரைபாய்தல் - மலையினின்று குதித்து உயிர் விடுதல். நன்றே - ஆடூஉ முன்னிலை.

37. கல்லா - கற்று; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். துவவா, என்பதும் அது துவவா, து - பகுதி; முனிவு - வெறுப்பு. கண்பாடு - உறக்கம்; கண்படு - பகுதி. மேன்மக்கள் நூல்களைக் கற்றுப் பொழுது போக்குவர். இடைப்பட்டவர் கிடைத்தவற்றை நுகர்ந்து பொழுது போக்குவர்; கடையாயர் இனிய உணவை உண்ணப் பெற்றிலேம், செல்வம் நிரம்பப் பெற்றிலேம் என்ற வெறுப்பினால் உறக்கமற்றவராவர் என்பதாம்.

38. நசை - விருப்பம். தம்மை உணரார் - தமது தன்மையை அறியாதார். எண்ணி என்புழி உம்மை தருக.

39. கூற்றம் - யமன்; உயிரை உடலினின்று கூறுபடுப்பவன் - காரணக்குறி. கூற்றம், பிணி, பேய், படை - உவமையாகு பெயர்கள். படை - படுத்தலையுடையது; படு பகுதி.

40. கயவர் - கீழோர். விடு - துணிவுப் பொருட்டு. நூறு எழுநூறு என்பன எண்ணின் மிகுதியைக் குறித்து நின்றன. இச் செய்யுளோடு 'ஒரு நன்றி செய்தாரை உள்ளத்தே வைத்து, பிழை நூறுஞ் சான்றோர் பொறுப்பர்,' என்னுந் திருவாக்கை ஒப்பிடுக.

41. உழை - பக்கம். அழுங்க - கெடும்படி. எற்றால் இயன்றது - எத்தகைய பொருளினால் செய்யப்பட்டதோ. ஓ - இழிவு சிறப்பு.

42. சக்கரச செல்வம் - அரசனைப்போன்ற பெருஞ் செல்வம். விழுமியோர் - மேலோர். முந்திரி - சிறு எண்; $\frac{1}{320}$. காணி - எண்: ஒன்றில் அறுபத்து நான்கிலொரு பங்கு. கீழ் - கீழ்மகன்.

43. புறந்தரல் - காப்பாற்றல். ஊட்டி - உண்பித்து.

44. கற்றன - கற்ற நூற்பொருள்கள்; வினையாலணையும் பெயர். சாயல் - மென்மை. பல்குதல் - நிறைதல்.

45. குலம் முதலியவற்றுள் பெயர்ச்செவ்வண் தொகை பெற்று வந்தது.

46. ஆடிய - செய்யிய என்னும் வாய்ப்பாட்டெச்சம்; ஆடும் பொருட்டு. அலிதல் - அடங்குதல். ஆடுதும் - ஆடு முதனிலை; தும் - விகுதி; எதிர்காலத் தன்மைப் பன்மையில் வந்தது. ஆல் - அசை. குறை - காரியம். மற்று - வினைமாற்று. 'திரையவித்து நீராடலாகா' என்றார் பிறரும். இப்பாட்டின் முதலிரண்டடிகளில் எதுகை இன்மை அறிக.

47. இப்பாட்டின் கருத்து சாலவும் அழகியது. இது போன்ற ஒரு மேன்மையான கருத்து ஆங்கிலப் புலவர் Browning என்பார் வாக்கிலும் காணப்படுகின்றது. அதனை அம்மொழியினர் பாராட்டும் பாராட்டுக்கு அளவில்லை. நம் தமிழ் மொழியில் அது சாதாரணமாய்க் குடத்துள் ஏற்றிய விளக்குப்போல் மறைந்துகிடக்கின்றது. இது போன்ற உயர்ந்த கருத்துக்கள் தமிழ் மொழியில் மிகப் பல.

வசை - குற்றம். அரிமா - சிங்கம்; இருபெயரொட்டு. கரிமா, பரிமா என்பனவும் அவை. கோல் - அம்பு. அம்பினின் - இன் உருபு எல்லைப் பொருட்டு. இது பிறிது மொழிதல் என்னும் அணி. 'கானமுயல எய்த அம்பினில் யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது,' என்னுந் திருக்குறள் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

48. எரிவாய் நிரயம் - நெருப்பைத் தன்னிடத்தே கொண்ட ஒரு வகை நரகம். உம்மை - மறுமை; மை - இடமுணர்த்தும், இம்மை, அம்மை முதலியவற்றுள் போல; உ - சுட்டு. பரியதூஉம - அளபெடை, இன்னிசையின் பொருட்டு வந்தது. இப்பாட்டு, பெரியோர் தம்மை இகழுவாரை அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலப் பொறுத்தலே அன்றி, அவருக்குப் பின் எய்தும் துன்பம் நோக்கி, வருந்துவரு செயவர் என்று கூறுதலின் ஒப்புயர்வற்ற கருத்தினதாதல் காண்க.

**3. ஆசாரக்கோவை:**

49. எவ்வுயிர்க்கும் என்பதை நோக்குக. 'ஓரறி வுயிர்க்கும் உறுதுயர் ஓம்பி' என்றார் தாயுமானவர். நட்டல் - சிநேகஞ் செய்தல்; நள் - பகுதி. இக்கூறிய குணங்கள் எட்டும் ஆசாரங்கட்கு மூலகாரணம் என்று கூறுதலால் இவை யில்லாதார் நீராடல் முதலிய யாவும் உண்மை ஆசாரமாகா என்பது இனிது பெறப்படும்.

50. வைகறையாமம் - விடியற்காலை. ஒண் பொருள் - ஒள்ளிய பொருட்கு வருவாயாகிய காரியம். வாயது - உண்மை. முந்தையோர் - முன்னோர். உம்மைகள் எண்ணுப் பொருளன. தொழுதெழுக என்பதை எழுந்து தொழுக என மாற்றுக.

51. ஒன்று - ஆகுபெயர். விழுத்தக்கார் - மேலோர். அவை - சபை.

52. ஏதம் - துன்பம்.

53. நந்து எறும்பு - மகிழ்ச்சியையுடைய எறும்பு.

**4. புறநானூறு:**

54. உற்றுழி - உற்ற + உழி - துன்பமுற்ற இடத்து; அகரம் தொகுத்தல் விகாரம். பிற்றை நிலை - பின்னே நிற்றல். முனிதல் - வெறுத்தல். கற்றல் - கல் + தல். பால் - பகுதி.

பாலால் என்புழி ஆல் மூன்றனுருபு. தாயும் - உம்மை உயர்வு சிறப்பு. நாற்பால் நான்காகிய பகுதி; நான்கு குலம். கீழ்ப்பால் - கீழ்க்குலம். ஒருவனும் - உம்மை சிறப்பு. அரசு - பண்பாகு பெயர்; அரசன் செல்லும் - செய்யுமென்முற்று. கற்பின் - கல் - பகுதி, ல் - ற் ஆனது சந்தி, ப் - எழுத்துப்பேறு, இன் - எதிர்கால வினை யெச்ச விகுதி. வருக - வா முதனிலை, க - வியங்கோள் வினைமுற்று விகுதி, ரு விரித்தல் விகாரம்; முதனிலை குறுகியது குறுக்கல் விகாரம். இந்த ஆரியப்படை தந்த பாண்டியன் நெடுஞ்செழியன் பாடியது. இவனது கல்வி விருப்பு இதனுனே நன்கு விளங்கும்.

55. படைப்பு - படைக்கப்படுஞ் செல்வம். உடைப்பெருஞ் செல்வம் - உடைமை மிகக செல்வம். அடிசில் - சோறு; அடப்படுவது என்பது அவ்வயவப் பொருள். பயகுறை - பயனுகிய முடிககப்படும் பொருள். இது பாண்டியன் அறிவுடை நம்பி பாடியது. இவன் மககள்பால் மிக்க அனபுடையவன். 'அமிழ்தினும் ஆற்ற இனிதே, தம்மக்கள் சிறுகை அளாவிய கூழ்,' என்பது குறள்.

56. வடித்தல் - தகடாக்கல். நல்கல் கொடுத்தல். வேந்தற்கு - வேந்தன் + கு - வேந்தனுக்கு. ஒளிறு வாள் - விளங்கும் வாள்; வினைத் தொகை. அருஞ் சமம் - வெல்வதற்கரிய போா. முடுககல் - அழித்தல். களிறு எறிந்து - ஆண் யானையைக் கொன்று. காளை - உவமையாகு பெயர்.

---

## III. தமிழ்

### 1. திருவிளையாடற்புராணம் :

1. கண்ணுதற் பெருங் கடவுள் - சிவபெருமான். கழகம் - முதற்சங்கம். ஓகாரம் - எதிர்மறை. தமிழ் இலக்கண வரம்புடைய மொழி என்பது கருத்து.

2. தொண்டர் - அடியார். தூதிடை விடுத்தது - சுந்தரமூர்த்தி நாயனுருக்காகப் பரவையாரிடம் சிவபெருமான் தூது சென்றது. முதலை உண்ட பாலனை அழைத்தது - சுந்தரர் அவிநாசியில் முதலை உட்கொண்ட பார்ப்பனச் சிறுவனை எழுப்பியது. எலும்பு பெண்ணுருவாக் கண்டது - ஞானசம்பந்தர்

மயிலையில் எலும்பைப் பூம்பாவை ஆக்கியது. மறைக்கத விளைத் திறந்தது - திருநாவுக்கரசர் திருமறைக் காட்டில் வேதத்தால் அடைக்கப்பட்ட கதவைப் பதிக மோதித் திறந்தது. கன்னித் தமிழ் - அழியாத தமிழ். மறுபுலச் சொற்கள் - வேறு நாடுகளில் வழங்கும் மொழிகள். தமிழ் மொழியின் தெய்விகத் தன்மையை இப்பாட்டு விளக்கிற்று.

**2. மனோன்மணீயம் :**

3. களிதெலுங்கு என்றார் இன்னிசையால் மகிழ்ச்சி பயத்தலின். கவின் மலையாளம் என்றது அதன் அழகு நோக்கிப் போலும். 'கொடுமலையாளக் குடியிருப்புடையேன்' என்று பிறிதோரிடத்தில் இவ்வாசிரியர் கூறியது அந்நாட்டின் ஒழுக்கத்தை நோக்கி என்க.

4. கடல் குடித்த குடமுனி - அகத்தியர். தொடுகடல்; சகரரால் தோண்டப்பட்ட கடல்; அதனுனே சாகரம் எனப் பெயர் பெற்றது: வடமொழி தத்திதம்.

5. விழிப்பாரேல் - ஒன்றும் கூறத் தோன்றாது நிற்றல்; நெற்றிக் கண்ணால் பார்த்தல்; இரட்டுற மொழிதல்.

7. 'வேகவதிக் கெதிரேற விட்ட தொரு சிற்றேடு' என்றது ஞானசம்பந்தர் சமணருடன் வாது செய்தபோது திருப் பாசுரம் எழுதிவிட்ட ஏடு.

8. அம்பலத்துள் உடையார் - நடேசர். வாசகம் - திருவாசகம். திருவாசகத்தைச் சிவபெருமான் தமது திருக்கரத்தால் எழுதியதைக் குறிக்கிறது.

## IV. வருணனை

**1. அந்திமாலைச் சிறப்பு :**

1. சேவல் - ஆண்பாற் பெயர். அயர்ந்து - இன்பத்தால் தன்னை மறந்து. பூம்பொதி - பூவினது கட்டு. அரிக்குரல் - மெல்லிய குரல். அழைஇ - சொல்லிசை அளபெடை. கானம் என்றார் மிகுதிபற்றி. சேதா - சிவந்த நிறமுடைய பசு. குரல் - குரலையுடையனவாய். முல்லை - முல்லைப் பண். அமரகம் - போர்க்களம். தமரகம் - தம் சுற்றத்தார் இருப்பிடம். இறுத்தனன் - தங்கினன்.

## 2. இராமபிரான் கடல் காணல்:

2. சங்கு - வளையல். கொங்கு - பூந்தாது. கங்குல் - இரவு. இராமன் வருத்த மிகுதியைத் துயிலாமையின் மேல் வைத்துக் கூறுவார் இராப்பொழுதில், அனைவருந் துயிலுந் தன்மையை இனிது விளக்க, 'தாமரையின குழுவுந் துயில்வுற் றிதழ் குவிக்குங் கங்குற் பொழுது,' என்றார். கண்ணன் - கிருஷ்ணன் என்றும் பெயரினனாகச் சசிதை யென்பர் பேராசிரியர். துயிலாத கண்ணனைக் கண்ணுற்றார் எப்பதிவுள்ள சொல் நயங்களை உணர்க. துயிலாமை என்னும் தன்மையைக் கடலுக்குக் கூட்டினும் பொருந்தும். எக்காலத்தும் ஒலிசெய்து கொண்டிருத்தலின் கடல் கண்துயிலாது என்றார் எனக. இராமன் துயிலாமையைக் கடலின் மேலும் வைத்துக் கூறினார். துன்பமுற்றார் தம்மையல் போன்றவரைப் பிறபொருளிடத்துக் கண்டவிடத்து, தம்மைப்போல் அவரும் துயருற்றாரோ எனவெண்ணுதல் இயற்கை. இக்கருத்தை,

> 'அரவகற்று மென்போல ஆர்கலியே, மாதை
> இரவகற்றி யுந்தாய் கொல இன்று.'

என்புழியுங் காண்க. அல்லதூஉம் துயரமிகுந்தோர் அறிவு ஒரு நிலைப்படாமையின் வந்தன வந்தன சொல்லுதலினாலும் இஃது தோன்றும். அன்றியும், நல்லிசைப் புலவன் துன்பமிகுதியை உணர்த்துவான் இவ்வாறெல்லாம் புனைந்துரைத்தல் கேட்போர் உள்ளத்தில் அதற்கேற்ற தன்மை நிலையுறுத்தும் பொருட்டென்று கொள்ளலும் கூடும் என்க.

3. சேயகாலம் - நெடுங்காலம். அகலத்திரிந்தான் - நெடுந் தூரம் திரிந்தான். சேக்கை - படுக்கை. வளர்வான் - கண்படையான்; துயில்குவான். பாயல் - படுக்கை. முத்தைச் சிந்தி நுரைக்கூட்டம் சுருண்டு எழும்பி அடங்குதல் மலரும் முத்தும் சிந்தியுள்ள படுக்கையை உதறி விரிப்பதுபோல் இருந்தது என்றார்.

4. நென்னல் - நேற்று. பிள்ளைத் தென்றல் - இளந்தென்றல்; உயர்திணையாற் கூறினார். கள் - பூந்தேன். கடல் தன் மகளாகிய சீதையைப் பறிகொடுத்து வந்த மருமகனாகிய இராமபிரானது மேனிவாடி யிருத்தலைக் கண்டு, துன்பமிகுதியால் யாதும் கூறுதலின்றித் தானே வருந்துவதாக, அக்கடலின்

மகவாகிய தென்றல் விருந்தினனாக வந்த மைத்துனனுக்கு உபசாரம் செய்யாதிருத்தல் கடனன்று எனக் கருதிப் பூவைச் சொரிந்து, நீடசித்து, மகரந்தப் பொடியைப் பூசிற்றென்றார்.

5. இதுவரையில் திருத்தோள்களுக்கு எவ்வாற்றானும் உவமிக்கலாகாத மலை இதுபோழ்து சீதையைப் பிரிந்ததனால் மெலிந்திருத்தலின் சிறிது உவமையாகக் கொள்ளத்தக்கதாயிற்றென்பார், 'திருவொடு தோட்குவமை மலையுஞ் சிறி தேய்ப்ப', என்றார். தம்மால் விரும்பப்பட்ட மகளிரைப் பிரிந்தாக்கு அவர் உறுப்பை ஒத்த பொருள்களைக்கண்டுழி அவர்மேல் நினைவு கூர்தல் இயற்கை ஆதலின், கொடிப்பவளத்தைக் கண்ட பெருமான் பிராட்டியாரின் மனி வாயை நினைந்து வருந்தினன் என்றார். 'உயிர்குடிக்குங் கூற்றம்' என்றார், பெருந்துயர் விளைத்தலின். உயிர் குடிக்கும் - 'உண்டற்குரிய அல்லாப் பொருளை உண்டல் போலக் கூறலும் மரபே,' என்னுஞ் சூத்திரத்தான் (தொல்காப்பியம்) முடிக்க.

6. மூரல் - பல். முறுவல் - சிரிப்பு. முத்தைக் கண்ட இராமபிரான் சீதையின் பற்களினிடையே தோன்றும் குறுநகையை நினைந்து வருந்தினன் என்க.

7. இந்து - சந்திரன். தளரக் கண்ணீர் - முத்துப் போன்ற கண்ணீர். வள்ளல் - இராமன்; வரையாது கொடுப்பவன். மலர்த்தாள் - மலர்போன்ற தாள்: உவமைத் தொகை; மலர்தாள் ஆயின் மலர்ந்த தாள் எனப்பொருள் பட்டு வினைத் தொகையாகும். எய்க்கும் - ஒக்கும். கடல்நீர் இராமன் திருவடிகளில் பாய்தல் கடலாகிய மாமி தன் செல்வியின் தனிமைக்கிரங்கிக் காலில் விழுந்து புலம்புதலை ஒக்கும் என்றார் என்க.

8. அண்ணல் - பெருமை; சொல்லால் அஃறிணை பொருளால் உயர்திணை. இளவல், திரையல், தோன்றல், சேரல் என்றாற் போல்வதோர் லகரவீற்றுப் பெயர்ச்சொல். உலகம் கல்லாகப் புனல் தெளிப்ப, தூநீர்க் குழவி முறை சுற்றி, நுரைக் கலவை அண்ணல் திருமேனிக்கு அப்பத் திரைக்கரத்தால் அரைப்ப தேய்க்கும் மணியாழி எனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

## V. இனிய பகுதிகள்

**1. நளன் கடற்கரையைச்சேர்தல் :**

1. அலவ - நண்டே, அண்மை விளி. ஓ - இரக்கப் பொருட்டு. பாதகன் இடவழுவமைதி.

2. பானல் - கருங்குவளை. கானல் - கடற்கரைச் சோலை. குருகு - நாரை. வீங்கிருள் - மிக்கவிருள். உணர்ந்தால் - விழித்தால்.

3. நாவாய் - வாயில் நா; மரக்கலம். ஆர்கலி - கடல்; அன்மொழித் தொகை. கொல் - ஐயம். இதிலுள்ள சிலேடை அணியை நோக்குக.

**2. தமயந்தி தனிமை :**

4. ஏ - அசை. ஒழுக, அலைப்ப, பட்டுழலும் பிணை எனக் கூட்டி முடிக்க. கான்று ஆர் - வெளிப்பட்டுப் பொருந்திய. கவுள் - கன்னம். கணை - அம்பு. பிணை - பெண்மான். மான் குதிரை. வார்கழல் - நீண்ட வீரகெண்டை. தோன்றால் - விளி. தோன்றலை - தோன்றாமலிருக்கின்றாய். 'வேடர்களது அம்பு பட்டுத் துன்புறும் பெண்மானைப் போன்று வருந்துகின்றேன். துயரைத் தீர்க்க இன்னும் என்முன் நீ வாராதிருத்தல் என்ன வியப்பு,' என்றாள். வருத்தத்தின் மிகுதி புலப்பட, 'கணைபட்டுழலும் பிணையொத்தேன்,' என்றாள். அவனினுஞ் சிறந்த வேந்தர் இலரென்பாள், 'அரசர் முடியுழுத வார்கழற் கால் தோன்றால்,' என்றாள். அவனைக் காண்பதே தனக்கு மகிழ்ச்சி என்பாள் 'கண்களிப்ப' என்றாள். எனக்குச் சிறிது இடர் விளையினும் அதனை உடனே வந்து தீர்க்கவல்ல நீ பெருந் துயருழந்தும் இன்னும் தோன்றாதிருத்தல் என் என்பாள், 'இன்னமும் என் தோன்றலையே,' என்றாள்.

5. நேரலார் - பகைவர்; மனம் பொருந்தாதவர் என்பது சொல்லின்படி பொருள்; கேளார், மருவலர், சேரலர், ஒன்னலர் முதலிய சொற்கள் இவ்வாறே பொருள்படுதல் காண்க. ஏறு - ஆகு பெயர். ஆரம் - மாலை; ஹாரம் என்னும் வடசொல்லின் திரிபு. அளியேன் - கருணை செய்யத் தக்கவளாகிய நான். கார் - கருமை என்னும் பண்பின் விகாரம். 'ஈறுபோதல்' (நன் - சூ - 136) காண்க. 'புலம்பே தனிமை'

என்பது தொல்காப்பியம். மிக்க இருளில் கொடிய காட்டில் பேதையாகிய நான் தனியே கிடந்து வருந்தும்படி விட்டுச் சென்றும் இதுவரையில் என் கதி என்னாயிற்று என்று நோக்கா திருப்பது தானா உனது பெருங்கருணை என்றாள் என்க.

6. உம்மைகள் எண். காணாது - காண் - பகுதி, உ - விகுதி, த் - எழுத்துப்பேறு, ஆ - எதிர்மறை விகுதி; எதிர்மறை வினையெச்சம். கண்பனிப்ப - கண்களில் நீர் ஒழுக. மஞ்சு - வெண்மேகம். வெற்பெறிந்த வச்சிரத்தோன் - மலைகளின் இறகுகளை வெட்டிய வச்சிரப்படை யுடைய இந்திரன். அன்று - பண்டறி சுட்டு; தமயந்தியின்பால் தூதாகச் சென்றதைக் கருதியது. விஞ்சை - வித்தை. மெலிவேன் காணாது கண்பனிப்ப அயருதியோ எனக்கூட்டி முடிக்க. பனிப்ப - எதிர்காலப் பெயரெச்சம் (காரியப் பொருட்டு).

7. நாட்கமலம் - அன்று பூத்த தாமரை. வாய்நெகிழ்தல் - மலர்தல். வெய்யோன் - சூரியனை; கதிர்வடிவேல் - ஒளிபொருந்திய இலை வடிவாகச் செய்யப்பட்ட வேல்; வேல் - வெல்வது காரணக்குறி. கடவ - செய்யத்தக்க; செயவெனச்சங்கள் உடனிகழ்ச்சிப் பொருளனவாய் நிகழ்காலம் காட்டின.

8. அகலம் - மார்பு. இப்பாட்டால் தமயந்தியினது உண்மைக் கற்பின் உயர்வு புலப்படும். பின்னிரண்டு அடிகளிலும் தோன்றும் உணர்ச்சிகளை அறிந்தின்புறுக. எவ்வாறேனும், உன்னை மணவாது விடேன் என்ற துணிவு கற்புடை மகளிர்க்கு இன்றியமையாதது.

9. வாவும் - தாவும். பிடி - பெண்யானை. புள்ளினம் - பறவைக் கூட்டம், ஆறும்வேற்றுமைத் தொகை, பலவின்பாற் பிறிதின்கிழமை; அவை பூவை, புறவு முதலியன. தனது ஆற்றாமையான் தன்னோடு ஒவ்வோர் வகையான் ஒற்றுமை யுடைய மான்கள் முதலியவற்றைப் பார்த்து வழிகாட்டும்படி வேண்டினாள். மான் மருட்சியானும், மயில் சாயலானும், பிடி நடையானும், குயில் மொழியானும் மகளிர்க்கு உவமையாதல் அறிக. 'காவலன்' என்னுஞ் சொல் குறிப்பு மொழியாய்க் காரணப் பொருள்பற்றி, உலகத்தைக் காக்க வல்லனாயினன், சொன்ன சொல்லைக் காக்க வல்லனாகாமையாயினன் என்பது தோன்ற நின்றது.

**3. வறுமையின் கொடுமை :**

10. பொருமி - விம்மி. வீழா - வீழ்ந்து ; செய்யா வென்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்.

11. அங்கோ - ஏயோ ; திசைச்சொல். அன்றாய் - விளி ; ஓகாரம் ஆய் எனத் திரிந்தது. செப்பு திசைச் சொல் என்பர். சேய் - புதல்வன் ; செம்மையினின்றும் பிறந்தது. ஆர்வம் - அவா. மிசைதல் - உண்ணல். ஈந்தா - ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். நயக்கும் - விரும்புவான் ; செய்யுமென் முற்று. சேயை அஃறிணையாகக் கொள்ளலுமாம்.

12. கலாம் - மாறுபாடு. மைந்தர் - மக்கள் ; பிற்காலத் துப் பற்றுக்கோடாவார் என்பது உறுப்புப்பொருள் ; மைந்து - வலிமை. நனி - உரிச்சொல் ; மிகுதி. வண்ணம் - நிறம் ; வர்ணம் என்னும் வடசொல்லின் திரிபு ; ஈண்டு அழகு. கரதலம் வடமொழித் தொடர் ; கையகம். மை - அஞ்சனம். வெரிந் - முதுகு. தைவந்து - துடைத்து.

13. அட்டார் - சமைத்தார் ; அடு - முதனிலை ; இரட்டி இறந்தகாலங் காட்டிற்று ; ஆர் - விகுதி ; உகரக்கேடு சந்தி சுவைத்து - குறிப்பு வினைமுற்று. மடுத்த அஃது - சிறுவன் உண்ட அப்பொருள். உரைக்கில் - உரை - பகுதி, இல் - வினை யெச்ச விகுதி, கு - சாரியை, க் - தோன்றியதும் உகரக்கேடும் சந்தி. குழந்தை கேட்கும் பொருளைக் கொடுக்க இயலாதவர் குழந்தை யாதேனு மோராற்றால் அதனை மயக்குமாறு செய்தல் இயல்பு.

14. அயின்ற - தின்ற. பக்கணம் - பக்ஷணம் என்னும் வடமொழித் திரிபு. வாய் ஊறுதல் - உண்ண விரும்புதல்.

15. சுட்டி - நுதலணி. குழவி - குழந்தை ; குழ - உரிச்சொல் இளமைப் பொருளைக் காட்டும் ; 'மழவும் குழவும் இளமைப் பொருள' (தொல் - உரி - சூ 15.) புண்டரீகம்-தாமரை ; வடசொல். பொறுமை - இச்சொல் இங்கே பொருந்தவில்லை. மதலை - குழந்தை. தப - கெட : செயவெனச்சம் ; காரியப் பொருட்டாய் எதிர்காலம் உணர்த்திற்று. கடன்பட்டார் போல் கலங்கித் தவனை சொல்லி வந்தாள் என்க. கடன்பட்டார் கலக்க மிகுதியைக் கம்பர் கவியே களக்கமறக் காட்டும் :

'விடங்கொண்ட மீனைப் போலும்,வெந்தழன் மெழுகு போலும்,
படங்கொண்ட பாந்தள் வாயிற் பற்றிய தேரை போலும்,
திடங்கொண்ட ராம பாணஞ் செருக்களத் துற்ற போழ்து
கடங்கொண்டார்நெஞ்சம்போலக்கலங்கினனிலங்கைவேந்தன்.'

**4. பாண்டியன் இரங்கல்:**

16. சிலைத்தழும்பு - அருச்சுனன் பாசுபதம் பெற நின்ற போது அடித்த வில்லடி. தொடை - மாலை; தொடுக்கப்பட்டது; காரணக்குறி. தொடு - பகுதி; ஐ - செயப்படுபொருண்மை விகுதி. தொண்டன் சாக்கிய நாயனார். பிறரெல்லாரும் வீரத்தாலும், அன்பு மிகுதியாலும் இத்தகைய செயல்களைச் செய்தனர்; யானோ கோபத்தால் செய்தேன்; ஆதலின் அவற்றைப் பொறுத்ததுபோல் இது பொறுக்கலாகாதது என்பது தோன்ற, 'வெகுண்டடித்த கைப்பிரம்பும் பொறுத்ததோ' என்றான். பிரம்பு - பிரம்படி; ஆகுபெயர்.

17. கடி - மணம். மலர் - தாமரையை உணர்த்திற்று; சிறப்பினால் 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' என்றார் பிறரும். கடவுளர் என்பதில் அர், பலபாலைக் காட்டும். படி - பூமி. எழும் - உம்மை முற்று. வடு - தழும்பு. உம - இறந்தது தழீஇய எச்சம். பிரமன் முதலாய கடவுளரும் ஏனைய எல்லா உயிர்களும் நீயே என்பதுணர்ந்தேன்; அதலன்றே உன் திருமேனியிற் பட்டது எல்லார் மேலும் பட்டது; அவ்வடியை அடியேனும் பட்டேன்; பட்டதனால் இழிந்த நாயேனும் உன் திருமேனியே என்பது உணரப் பெற்றேன்; இதனினும் எனக்கு உவப்புத் தருவது யாது? எனக்கூறித் தான் அநுபவமாக உணர்ந்த உண்மையைப் பாராட்டிக் களிதுளும்பினான் பாண்டியன் என்க.

'எவ்வுயிரும் பராபரன்சந் நிதியதாகும் இலங்குமுயிர்
உடலனைத்தும் ஈசன் கோயில்' என்றதூஉம் காண்க.

18. நின்னை யுணர்ந்தவர் - உனது தடத்த சொரூப விலக்கணங்களை உள்ளவாறு அறிந்தோர். வேதம் - அறிதற்கருவி எனப் பொருள்படும் வடசொல். வேள்வி - யாகம்; வேள் - பகுதி; வி - தொழிற்பெயர் விகுதி. அமுதின் என்புழி இன் - ஐந்தனுருபு; உறழ் பொரு. கழிசுவைத்து - உரிச்சொற்றொடர். உம்மை - முற்று. துவர்வாய் - பவளம் போன்ற வாய்; உவ

மைத்தொகை. பெரியோர் வேதத்தில் விதித்தபடி வேள்வி செய்து தரும் அவியுணவினும் உந்தி யிடும் பிட்டு மிக்க சுவை யுடைத்தோ? 'அன்னையில்லாத எனக்கு இவள் ஓர் அன்னை யாய் அமைந்தாளோ!' என அவளது அன்பின் செவ்வியைப் புலப்படுத்தினான் என்க.

19. அன்று - பண்டறிசுட்டு. சிறுத்தொண்டர் - எல்லா ரிடத்தும் சிறியரிற் சிறியராய் இருந்ததால் பெற்ற பெயர். வேடன் - கண்ணப்ப நாயனார். மென்று சுவை தெரிந்தமையை,

'கொழுவிய தசைகள் எல்லாங் கோலினில் தெரிந்து கோத்தங்கு
அழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி நாவில்
பழகிய இனிமை பார்த்துப் படைத்தஇவ் விறைச்சி சால
அழகிய நாயனீரே அமுதுசெய் தருளுமென்றார்,'

என்பதனான் அறிக. வேண்டா வெறுப்பாய் உண்டானல்லன் என்பன் 'நயந்தருந்தி' என்றான். இதனால் இறைவனது எளிவரும் பெருமையைக் கூறினான்.

5. கும்பகருணனும் விபீடணனும்:

20. நீர்க்கோலம் - நீரோட்டம். தார் - மாலை; மார்பில் தரிப்பது. மைந்த - அண்மை விளி. தவிர்த்தி - தவிர் - பகுதி, து - பிறவினை விகுதி, இ - விகுதி.

21. பொருத்துறு பொருள் - தகுதியாகச் செய்யப்படும் காரியம். பொருதொழில் - வினைத்தொகை. சாதல் - சா - பகுதி; தல் - தொழிற் பெயர் விகுதி. உண்டவர் - செஞ்சோறுண்டவர். அம்மா - அசைநிலை. வீரர் போர்க்களத்தே சென்று பொருது இறத்தலைச் செஞ்சோற்றுக் கடன் கழித்தல் என்பர்.

22. தொடையல் - அல் சாரியை. இளைஞர் - சுற்றத்தார்; ஞ் - பெயரிடைநிலை. உம்பர் - தேவர்; ஆகுபெயர். ஓகாரம் எதிர்மறை. உம்மைகள் எண்ணின்மேல் நின்றன. இன்றி - குறிப்பு வினையெச்சம். இத்துணைப் பெருவாழ்வை அடைக் திருந்த தமையன் தம்பியர் இன்றிப் போர்க்களத்தே கிடப்பனோ? அஃது அவன் பெருமைக்குக் குறை என்று கருதியே யான் அவனுடன் இருந்து பொருது மடிவேன் என்றான் என்க.

23. சேறல் - செல் பகுதி நீண்டது விகாரம், தல் - தொழிற் பெயர் விகுதி, ல் - ற் ஆனது சந்தி. சூழல் - இடம்.

தோற்றுப்போன இமயன் ஊருக்குத் தனியே செல்லுதல் அவனுக்குப் பெரியதோர் தலையெடுப்பைத் தரும் என்றான் என்க.

24. இஞ்சி - மதில். வம்பு - மணம். தெரியல் - மாலை; தெரிந்து தொடுப்பது. எம்முன் - என் தமையன். பகை - ஆகுபெயர். துன்னம் - தையல். அடல் - வெற்றி. உம்மை - உயர்வு சிறப்பு. செம்பினை உருக்கிச் சேர்த்த மதில் - செப்பிட்டுச் செய்த இஞ்சி; 'செம்பினியன்ற செய்வுறு நெடுஞ்சுவர்,' என்றார் பிறரும்.

6. சந்திரமதிப் புலம்பல்:

25. உலவா - உலவாமல்; இறவாமல். வெங்கண் - கொடுமை.

26. செங்கோல் x கொடுங்கோல். திறலோன் - வலிமையுடையவன். உரவோன் - மன ஆற்றலுடையவன். பங்கேருகம் - தாமரை. அத்து - சாரியை. தருமநெறி தவறாது அரசு செலுத்துவதற்கு வன்மை வேண்டியிருத்தலின் 'திறலோன்' என்றார். ஆவலுடன் திரும்பி வரும் அரசனுக்கு மகன் இறந்தானென்று சொல்லுதல் இயலாத காரியம் என்பாள், 'எதிரேது சொல்வன்' என்றாள்.

27. வாவி - குளம். மாதவன் - விசுவாமித்திரன். நீர்மை - தொடர்பு - சம்பந்தம். கடவு ஓசை - செலுத்தும் ஒலி. கன்னோசி - Modern Kanouj.

28. அறங்கள் நாலெட்டு - தருமம் முப்பத்திரண்டு. அவை இவை என்பதை நிகண்டு முதலிய நூல்களில் காண்க. இறை - அரசனுக்குச் செலுத்தும் கடமை. இது - மகன் இறந்தது.

30. கனம் - மேகம். தருக்கள் குலம் - சந்தனம், அரிசந்தனம், பாரிசாதம், மந்தாரம், கற்பகம் என்னும் தேவலோகத்து விருட்சங்கள். உரம் - மார்பு. சிகை - மயிர்முடி. கொடுமை நோக்கி, 'உயிரான பாவி' என்றாள்.

31. வடி - கூர்மை. இடியேறு அடர்த்தமரம் - இடியினால் தாக்கப்பட்ட மரம். உழத்தல் - வருந்துதல். இப்பாட்டில் சந்திரமதி மகன் இறந்ததை நேரே கண்டும் தன்னுயிர் நீங்காமையினால் அன்பில் குறைந்தவளாக மதித்துத் தன்னினும் அரிச்சந்திரன் மிக்க புத்திரவாஞ்சை யுடையவன் என்று கூறுதல் காண்க.

இதனானே சந்திரமதியின் அன்பு மிகுதியே தொனிக்கும் என்பது.

**7. கண்ணபிரான் அவல் உண்ணல் :**

32 சுவைத்து - குறிப்பு வினைமுற்று. ஈது - இது நீட்டல் விகாரம். தேவாகதும் - உம்மை உயர்வு சிறப்பு. கோடல்- கொள் + தல் ; கொள்ளுதல். அளை-வெண்ணெய்.

33. குளம் - வெல்லம். என்று - என்று சொல்லி.

34. திருமால் திருப்பாற் கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிர்தம் கொடுத்தருளினராதலின் ' இமையவர்க்கு............ மேலோன் '.

## VI. பன்னெறி

1. சித்து - இரசவாதஞ் செய்வோர் தமது வன்மையை ஒருவருக்கு எடுத்துக் கூறுவதாகச் செய்யுள் செய்வது. இரசவாதம்-தாழ்ந்த உலோகத்தை உயர்ந்ததாகச் செய்தல்.

வீரத்தை அணிமழு - வீரம் உடையான் தொழில் உடைமை மேலேற்றிக் கூறப்பட்டது. மழு - குந்தாலிப்படை. உமைபங்காளர் - சிவன் என்னுந் துணையாய் நின்றது. சித்தர்- சித்தி பெற்றவர். 'கேள் + ஆகாரத்தை எமக்கிடுக' என்றும் 'கேளாய் + காரத்தை எமக்கிடுக' என்றும் பிரித்துரைத்துக் கொள்க. கஞ்சம் - தாமரை, வெண்கலம். கோகனகம்-தாமரை, சிறந்த பொன். கரியோர் - திருமால். தாரம் - மனைவி ; தரா. பொன்-கனகம், திருமகள். 'தம்பீ + தாம்பரமும் பொன்னாகச் சமைத்தோம்' என்றும். 'தம் + பீதாம்பரமும்பொன்னாகச்சமைத்தோம்' என்றும் பிரித்துப் பொருள் கொள்க. பீதம் - பொன். அம்பரம் - ஆடை. அயனாகம் - அயன் + ஆகம் - பிரமன் உடம்பு; அயல் + நாகம் - அசல் நாகம் ; அயம் - இரும்பு என்றுங் கொள்ளலாம். காரம் - வெங்காரம்.

2. அள்ளல் - சேறு அருணை - திருவண்ணமலை. இளம் பிறையும், வில்லும் வளைவால் நெற்றிக்குவமை. வள்ளை - வள்ளைக் கொடியை ஒத்த காது ; ஆகுபெயர். அம்பு, வாரிதி, கயல் மீன் கண்ணுக்குவமை. கடைப் பட்டதே என்னும் ஒரே சொல் பிரிந்து பல பொருள் பயக்கும். அம்பு கண்ணுக்குத் தோற்

றுத் தச்சனால் கடையப்பட்டதென்றும், வாரிதி - தேவாசுரரால் கடையப்பட்டதென்றும், கயல் கடையின்கண் பட்டதென்றும், இராசியில் மீன் - கடைசி இராசியாயிற்றென்றுங் கொள்க.

3. அம்மானை யென்பது மூன்று மங்கையர் சேர்ந்தாடும் விளையாட்டு அங்ஙனம் ஆடுங்கால் ஒருத்தி தலைவனது புகழைச் சொல்வாள் : மற்றொருத்தி அதை வினவுவாள் : மூன்றாவது மங்கை அவவினவை விடுப்பள். அவ்வாறு பாடப்பட்டது இச்செய்யுள்.

மாதங்கம் என்பது முப்பொருட் சிலேடை. சிலை மாதங்கம் எனக் கூட்டி வில்லும் பெரிய பொன்மலை என்றும், கலை மாதங்கம் எனக்கூட்டி உடை யானைத் தோல் எனவும், மெய் மாதங்கம் எனக் கூட்டி அங்கம் மாது பாதியான அங்கம் எனவும் பொருள் கொள்க. ஐயம் - பிச்சை, சந்தேகம். அன்னம் சோறு, அன்னப் பறவை.

4. இங்கே காட்டப்படும் மறம் காம்பீரியம்வாய்ந்து பொருத்தமான கருத்துக்களைப் பொருத்தமான சொற்களால் பொருத்தமான ஓசையுடன் கூறுவன. இவவிரண்டுள் பின்னது முன்பாட்டினும் சுவை வீறுடைத்து.

கொணர்ந்த - கொணா - பகுதி, கொணா எனக் குறுக்கல் விகாரம் பெற்றது; ர் - விரித்தல்; த் - இடைநிலை ; ந் - சந்தி ; ந் - கத் ஆகிரிந்தது ; அ - பெயரெசச விகுதி ; உகரம் கெட்டது. குறையுடல் - முண்டம். மறவர் - வேடர், மறத்தொழிலுடையவர். கொம்பு - பெண். அற்றவர்-பற்றற்றவர். தோழர்-குகட்பெருமாள். போலும் - ஒப்பில் போலி. திருமுகம்-நிருபம், அழகிய முகம். இளவரசு - இளவரசன் ; இளைய அரசமரம்.

5. ஆதம் - அண்மை வீளி. செல்லரித்த ஓலை - எழுத்தாணியால் எழுதப்பட்ட ஓலை. கவிகை - குடை. கால் - மரக்கால். குடில் - சிறுவீடு. இப்பாட்டில் மன்னர் தமக்குரிய கவிகை, மகுடம், சாமரம், வில், வாள் முதலியவற்றை இழந்து போயினரென்றும், அவற்றை வேடர்கள் தம் இருக்கைக்கு வேண்டிய கருவிப்பொருள்களாகப் பயன்படுத்திக் கொண்டனர் என்றுங் கூறினர். இப்பொருத்தத்தைக் கூர்ந்துணர்க.



## VII. தனிப்பாடல்கள்

**1. காளமேகப் புலவர் :**

1. ‘ஈயேற மலை குலுங்கப் பாடுக’ என்றவருக்கு’ உலகமே குலுங்கியதாகப் பாடுவேன்’ என்றுரைத்துப் பாடியது. தாரணி - பூமி; தரிப்பது என்பது தாதுப் பொருள்; வடமொழி. நாரணன் - நாராயணன் என்பதன் திரிபு; நாரம் + அயனன் - நாராயணன், நீரை இருப்பிடமாகக் கொண்டவன் எனக் காரணப் பொருள் காண்க.

2. முத்து - ஆமணக்கின் முத்து; தந்தத்தினின்றும் பிறக்கும் முத்து. தண்டு - தாள், சேனை. தேம் - மணம். மால் - பெருமை.

3. முகங்காட்டும் - கோபிக்கும், முகத்தைத் தெரிவிக்கும். பிண்ணாக்கு - பிளவுபட்ட நாக்கு.

4. பெரியவிடம் - மிக்க நஞ்சு, பெரிய + இடம். பித்தர் முடி - சிவபிரான் சடைமுடி, பைத்தியம் பிடித்தோர் மயிர் முடி. அரி உண்ணும் - காற்றைப் புசிக்கும், அரியப்படும். உப்பு மேல் ஆடும் - உப்பு மேலிடப்படும், உப்புப் பட்டதின் மேல் நஞ்சு மிகும்.

5. கம்பம் - கட்டுத்தறி. கடகளிறு-மதத்தையுடைய ஆண் யானை. தில்லை - சிதம்பரம்; தில்லைக்கொடி சூழ்ந்திருந்ததால் பெற்ற பெயர். கணபதி - கணங்களுக்குத் தலைவர். விழித்திருந்தார் - இமையாத கண்ணையுடையாராதலின். அயில் - கூர்மை. கண்ணீராறானன் - கண் + நீர் + ஆறு + ஆனன்; என்றும் கண் + ஈர் + ஆறு + ஆனன் - என்றும் பிரித்துக் கொள்க. பம்பல் - பொலிதல். சுடர்க்கண்ணன் - சிவன். பயம் - அச்சம். பால் - பாற்கடல். உமை உடல் பாதியாயது - அர்த்தநாரீசுவர வடிவம்.

**2. இராமச்சந்திர கவிராயர் :**

9. சங்கரன் உயிர்கட்கு இன்பத்தைச் செய்பவன். வில்லால் - ஆல் - கருவிப் பொருளில் வந்தது.

**3. படிக்காசுப்புலவர் :**

10. மூவேந்தர் - சேர சோழ பாண்டியர். தேவேந்திர தாரு - கற்பக விருக்ஷம்.

14. சிறுமை + ஆள் - சிற்றாள்; ஈறுபோய்த் தன்னொற்றி ரட்டியது. கற்று - கன்று + ஆ - மென்றொடர் வேற்றுமையில் வன்றொடராயிற்று. 'மென்றொடர் மொழி'—(நன் - சூ. 184.)

4. சீட்டுக் கவி:

15. சேடாதிபன் - ஆதிசேஷன். பாடாத கந்தருவம் முதலாயின குதிரைக்கு வெளிப்படை. கந்தருவம்; கந்துகம், கோணம், கொக்கு, கோடை, குந்தம், பாடலம், மா, கடிலம், கிள்ளை என்னும் இவையெல்லாம் குதிரை யெனப் பொருள் பயக்குமாறு அடைமொழிகள் புணர்த்து ஓதிப் பிற பொருள் களினின்றும் பிரித்துக் காட்டினார். கந்துகம் என்பதற்குப் பந்து என்றும்பொருள்; எறியாத கந்துகம் எனவே பந்து அன் றென்பது வெளிப்படையாக விளங்கிக் குதிரையைக் குறித் தது; பிறவும் இவ்வாறே அறிந்துகொள்க.

5. ஆற்றுப்படை:

16. புரவி - குதிரை. வாரணத்தொகுதி - யானையினது கூட்டம்; ஒன்றன் கூட்டம் யாழ்-வீணை. முன்றில் - இலக்கணப் போலி. நித்திலம் - முத்து சிகரம் - மலையினுச்சி. ஆர் - ஆத் திப்பூ; ஆத்திமாலை அணிந்த சோழன். வேம்பு - வேப்பமாலை அணிந்த பாண்டியன். பனை - பனைமாலை தரித்த சேரன். அரசு - அரசன். அத்தி - யானை. ஆர், வேம்பு முதலியன மரங் களின் பெயராதலையுங் காண்க.

## VIII. காதை

காதை - கதை பொதிபாட்டு. திரு - மேன்மையைக் குறித்து வரும் அடைமொழி. திருவடி, திருக்கோயில், திரு முறை முதலியவற்றிற் போல. தொண்டர் - அடியார். புரா ணம் - பழைய வரலாறு. குங்குலியப் புகையை யிட்டதனால் குங்குலியக்கலயர் எனப்பட்டார். கலயர் என்பது இயற்பெயர். கலயம் - கலசம், குடம். திருக்கடவூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் கலயவடிவாக இருத்தலின் அவருக்குக் கலய ரெனத்திருநாம முண்டு. அதனையே நாயனாருக்குப் பெற்றோர் பெயராக வழங்கினர். நாயனார் - தலைவர்; நாயகன் என்னும் வடமொழி நாயன் எனத் திரிந்து ஆர் விகுதியைப் பெற்று முடிந்தது.

1. பொன்னி நாடு - சோழ நாடு ; பொன்னி - காவேரி. காவேரி நதி பாய்தலால் பொன்னி நாடு எனப்பட்டது. 'கோனிலை திரிந்து கோடை நீடினும் தானிலை திரியாத் தண்டமிழ்ப்பாவை,' என்றார் சாத்தனார். 'வாய்ந்த' என்றார் இயற்கை வளம் என்பது தோன்ற. எய்ந்த - பொருந்திய. எயில் - மதில். எறி நீர் நீள் சடை - வினைத்தொகைகள். பண்டு - முன்பு. தொண்டர - மாரக்கண்டேயர். காய்ந்த சேவடி - உடையான் தொழில் உறுப்பின்மேல் ஏற்றப்பட்ட உபசாரவழக்கு. காய்தல் - கோபித்தல். கடவூர் தஞ்சாவூர் தாலூக்காவிலுள்ள ஒரு சிவஸ்தலம்.

2. பெருநதி - கங்கை ; ஆயிரமுகம் உடைமையான் பெருநதி என்றார். வேணிப்பிரான்-சடையையுடைய பெருமான்.

3. கலித்தல் - ஒலித்தல். சென்னி - தலை. சூரியன் வலக்கண்ணாகவும, சந்திரன் இடக்கண்ணாகவும், அங்கி (நெருப்பு) நெற்றிக்கண்ணாகவும் உள்ளவன் என்பர். 'மேதயமார் ஒலி கனெல்லாம் சிவனுருத்தேசு' என்பர். கடவுள் உயிர்களிடத்தே பேரருளுடையராதலின் அவர் செய்யும் தொழில் அனைத்தும் அருளேயாகும். ஆதலின், 'அருளினாலே வறுமை வந்தடைந்த பின்னும்,' என்றருளிச செய்தார்.

'தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் [illegible] லாற்றின்
வந்திடா விடினுறுக்கி யளாரினு லடிப் [illegible]
பந்தமும் இடுவ ரெல்லாம் பாதத்திடற் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவு மென்றும்,'

என்பது சிவஞான சித்தியார். தவாமை - கெடாமை, உய்த்தல் - செலுத்தல்.

4. இலம்பாடு - வறுமை. 'நாடிய அடிமை' என்றார் தம்மை விட்டுப் பிரிய மனமில்லாதவர் என்பது தோன்ற.

5. 'உணவும் மாறி' என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்ச வும்மை. மற்றை நுகர்ச்சிகள் முன்னமே இழந்தமை புலப்பட 'உணவும் மாறி' என்றார். பேதுறுதல் - மயங்கல். கொள்ளும் - உம் விகுதி முன்னிலை ஏவலில் வந்தது.

6. கொள்வான் - வான் எதிர்கால வினை எச்ச விகுதி. பொதி - மூடை ; இப்போது மூட்டை என வழங்கும்.

7. அங்கணர் - அழகிய கண்ணையுடையவர். கண்ணோட்டம் ; 'கண்ணுக் கணிகலங் கண்ணோட்டம், ஆதலின்

அங்கணா என்றார். 'கணஞேட்டம என்னும் கழிபெருங் காரிகை' என்றா நயனூர். பெருப்பேறு - பெறுவதற்கருமையான அருட்செல்வம

'பூமன சிரஙகணடி அநதகன கோவல் புறமஅதிகை
மாமன பறியல சலநதரன விறகுடி மாவழுவூா
காமன குறுககை யமனகட வூரிநரக காசினியில்
தேமனனு கொனறையுந திஙகளுஞ சூடிதன சேவகமே.'

என்னை உடையவா - என்னை அடிமையாகக் கொணடவர். தம்மைக் கூறியவா, பிறரையும உளபபடுத்தி எமமையாளும் ஒருவர் என மீணடுங் கூறியது நோககறபாலது பணடாரம - திரவிய சாலை.

9 நமபா - விரும்பததககவா, சிவபெருமான் அளகை வேநதன குபேரன தூாதது நிறைதது குவை - கூட்டம். குவையும, கொலுமும, வளனும என பவறறிலுள்ள உமமைகள் எண்ணுப பொருளில வநதன

10 தெறறன வுணாாது - விரைவாகத் தூககநதெளிந்து.

12 காசன - இயமன செயய காலனா - சிவநத
தாமல திருவடியை யுடையவா ஆனும் அன்பு -
மிகுதி ம அனபு அடியவா - கலயா பருவரல் -
துனப ன அடிசில சிறநத உணடி, 'பாலோ
டாயினு ண' எனபுழிக காணக.

13. கேட்டு, செயயா என்னும வாயபபாட்டு வினையெச்சம அருள மறுததிருகக அஞசி - கட்டளையை மறுதது அவவிடததிருககப பயபபட்டு, என்றதனல இறைவன சநநிதியை விட்டுப பிரிய மனமிலலாதவராய இருநதார் என்பது பெறப்படும். தலமிசைக கொளளல - ஏறறுககொள்ளுதல் என்னும பொருளில உயாவு மொழி

14. புககார் - புகு - பகுதி, பகுதி இரட்டி இறநதகாலம் காட்டிறறு, ஆர் - விகுதி, உகரககேடு சநதி.

15. என்னையும என்புழி உம்மை இழிவு சிறப்பு.

16. பதும நறறிருவின மிககாா - தாமரை மலரில் வாழும் அழகிய திருமகளைக காட்டிலும அழகிற சிறந்தவர். பரிகலம் - பெரியோா உணணும் பாததிரம். கதுமென - விரைவாக. தீபம் ஏந்தி - தீபாராதனை செய்தல். கடவுளர்க்குச் செய்யும் உபசாரங்களை அடியார்கட்கும் செய்வது சிறப்பு.